


# வெள்ளி விழா மலர்



23-6-1974

# நகரத்தார் சங்கம்

திருச்சிராப்பள்ளி-2.

# வெள்ளி விழா மலர்



**23-6-1974**

ஆனந்த ஆண்டு ஆனித்திங்கள் 9-ம் நாள்



நகரத்தார் சங்கம்,

2, ஒத்தமால் தெரு,

திருச்சிராப்பள்ளி-2.



# மலரை நுகரும் முன்

சங்கத் தலைவர் திரு. ST. AR அருணாசலம் செட்டியார், செயலாளர் திரு. RM. நாராயணன் ஆகியோரின் நன் முயற்சியால் உருவானதே இம்மலர். மலரை வெளியிடும் பொறுப்பில் பணியாற்றும் பேரு கிடைத்தமைக்குப் பெரு மகிழ்வு எய்துகிறேன். வெள்ளி விழாக் கொண்டாடும் இச்சங்கம் பற்பல நற் பணிகள் செய்து பீடு நடை போடுகின்றது. இச் சங்கத்தின் உதவியால் இன்று வாழ்வில் உயர்ந்த இளைஞர் எண்ணிலடங்கா. சங்கத்தின் புதிய முயற்சியால் திருமணம் செய்து கொண்ட மணமக்கள் பலர். சங்கத்தின் ஆக்கப் பணிகளைப் பறை சாற்றுகிறது இம்மலர்.

இம்மலருக்கு வாழ்த்துச் செய்திகள் அனுப்பிப் பெருமைப்படுத்திய பெரியோர்களுக்கும் விளம்பரங்கள் கொடுத்து ஆக்கப் பணிக்கு வித்திட்ட வணிகப் பெருமக்களுக்கும், அழகிய முறையில் அச்சிட்டு உதவிய ரெயின்போ பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு. S. சொக்கலிங்கம் அவர்களுக்கும் சங்கத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இம்மலர் பூத்துக்குலுங்க உதவியோர் பலர். அவர்களில் சிலரையாவது குறிப்பிடாவிடில் நன்றி மறந்தவனாவேன். திரு. K. N சுப்பையா, சென்னை. திரு. M.V.M. முத்து, கோவை. திரு. N. பழனியப்பன், திருச்சி. திரு. செந்தில்நாதன் செட்டியார், காரைக்குடி. திரு. S. அண்ணாமலை, கோட்டையூர். திரு. பெத்த பெருமாள், மதுரை. திரு. R. M. அழகப்பன், மதுரை. பொருளாளர் திரு. S. சுந்தரம் முதலியோருக்கு எனது நன்றி உரித்தாகுக.

தங்களன்புள்ள,

**மெ. செல்லப்பன்.**

# நகரத்தார் சங்கம், திருச்சி.

செயற்குழு:

தலைவர்: ST. AR. அருணாசலம் செட்டியார்

உபதலைவர்: SAR. பழநியப்ப செட்டியார்

பொருளாளர்: S. சுந்தரம்

செயலாளர்கள்: P. L. ராமசாமி

RM. நாராயணன்

செயற்குழு உறுப்பினர்கள்:

SP. சண்முகம் செட்டியார்

V N. V. நாகப்ப செட்டியார்

VR. கிருஷ்ணன் செட்டியார்

VD. வயிரவன் செட்டியார்

V. சிதம்பரம் செட்டியார்

O. PR. உடையப்ப செட்டியார்

M. செல்லப்பன்

அழகு அழகப்பன்

RM. அழகப்பன்

P. சிதம்பரம்

NV. சோமசுந்தரம்

CT. சபாரத்னம்

L. லெட்சுமணன்

M. சந்திரசேகரன்

KR. கருப்பஞ் செட்டி

காப்பாளர்கள்:

AV. K. ஆவிச்சி செட்டியார்

AR. அண்ணாமலை செட்டியார்.

# ஆயுள் உறுப்பினர்கள்



1. வடு. வயிரவன் செட்டியார்
பொன்னமராவதி.

2. PL. லெக்ஷ்மணன் செட்டியார்
J-3, ஹவுசிங் யூனிட்
சாலை ரோடு, திருச்சி-3.

3. ST. AR. அருணாசலம் செட்டியார்
B-11, காலனி ரோடு
தில்லைநகர், திருச்சி-18.

4. AN. M. முத்துராமன் செட்டியார்
இராமலிங்கநகர், திருச்சி-18.

5. VR. KR. L. லெக்ஷ்மணன் செட்டியார்
B-31, N. E. E. மெயின்ரோடு
தில்லைநகர், திருச்சி-18.

6. RM. KV. அருணாசலம் செட்டியார்
57, பிஷப் ரோடு, புத்தூர்.

7. PL. பழனியப்ப செட்டியார்
32, பிஷப் ரோடு, புத்தூர்.

8. C. அண்ணாமலை செட்டியார்
ஏஜெண்ட், I.O.B
கண்டோன்மெண்ட், திருச்சி.

9. RM. நாராயணன் செட்டியார்
6-C, வார்னர்ஸ் ரோடு,
கண்டோன்மெண்ட்.

10. PR. முத்தையா
60, பிஷப் ரோடு, புத்தூர்.

11. S. M. வாசுதேவன் செட்டியார்
சிறுவயல், இராமனாதபுரம் ஜில்லா.

12. N. நாராயணன் B.O.M.
மகர்நோன்பு பொட்டல், காரைக்குடி.

13. P. S. PL. மெய்யப்ப செட்டியார்
பாங்க் ஆப் பரோடா
கோயம்புத்தூர்.

14. அண்ணாமலை செட்டியார்
A-16, மெயின் ரோடு
தில்லைநகர், திருச்சி-18.

15. P. சிதம்பரம் செட்டியார்
அருணா நகர், புத்தூர், திருச்சி-17.

16. CT. சபாரத்னம் செட்டியார்
22, பூந்தோட்டம் தெரு
கெம்ஸ்டவுன், திருச்சி.

17. M. செல்லப்பன்
பழனியப்பா பிரதர்ஸ்
தெப்பக்குளம், திருச்சி-2.

18. பழ. ராமசாமி
T. S. T., தில்லைநகர், திருச்சி-18.

19. S. சுந்தரம்
22, வார்னர்ஸ் ரோடு
கண்டோன்மெண்ட், திருச்சி.

20. RM. அழகப்பன்
ஏஜண்ட், I. O. B.
சொக்கிகுளம், மதுரை.

21. S. AR. பழனியப்ப செட்டியார்
10-A கிராஸ்
தில்லைநகர், திருச்சி-18.

22. கரு. செந்தில் நாதன்
ஏஜண்ட், இந்தியன் பாங்க்
காரைக்குடி.

23 S. RM. S. சுப்பையா செட்டியார்
C-138, 6வது கிராஸ்
தில்லைநகர், திருச்சி-18.

24. SP. சண்முகம் செட்டியார்
நித்திய கல்யாணி சைக்கிள் மார்ட்
சிங்காரத்தோப்பு, திருச்சி.

25. O. PR. உடையப்ப செட்டியார்
I. F. ஆபீஸர்ஸ் காலனி
புத்தூர், திருச்சி.

26. M. RM. M. AR. இராமநாதன் செட்டியார்
மீனாட்சி இல்லம்
1-D, 11-வது கிராஸ், தில்லைநகர்,
திருச்சி-18.

27. ஜமீன் சுப்பையா செட்டியார்
மெடிக்கல் யூனியன்
கல்லுக்கட்டி, காரைக்குடி.

28. AL. அழகப்பன்
76, செக்காலை ரோடு, காரைக்குடி.

29. AL. வீரப்பன்
7, முதல் வீதி
சுப்பிரமணியபுரம், காரைக்குடி.

30. A. நாராயணன்
'மீனா' மாதவ ரோடு
மாதவ நகர், சென்னை-34.

31. S.L.N.S. நாராயணன் செட்டியார்
M. M. தெரு, காரைக்குடி.

32. M. RM. S. PR. சொக்கலிங்கம் செட்டியார்
15, பெரியண்ணன் செட்டியார் சந்து,
காரைக்குடி.

33. M. S. உடையப்ப செட்டியார்
M. R. K. தெரு, பள்ளத்தூர்.
(B-9, ஃபார்லாண்ட்ஸ், சேலம்)

34. R. ராமஸாமி
14, பச்சையப்பா ஹாஸ்டல் ரோடு,
மதரூஸ்-10.

35. ராம. சித. சிதம்பரம் செட்டியார்
C-35, 5-வது கிரூஸ் N. E. E.
தில்லைநகர், திருச்சி-18.

36. ராம. முருகப்ப செட்டியார்
45, ராஜாஜி நகர், கண்டனூர்.

37. RM. பழனியப்பன்
478, பெரிய கடைவீதி,
திருச்சி-8.

38. S. ரத்னம் செட்டியார்
சிவில் இன்ஜினியர்
செட்டிநாடு சிமெண்ட் கார்ப்பரேஷன்
புலியூர், கரூர் தாலுகா.

39. S. அண்ணாமலை செட்டியார்
11, வெங்கிடாஜலம் செட்டியார் தெரு,
கோட்டையூர்.

40. சித. முருகப்ப செட்டியார்
89, மோதிலால் தெரு, கண்டனூர்.

41. S. சொக்கலிங்கம் செட்டியார்
ரெயின்போ பிரிண்டர்ஸ்
33, பாபு ரோடு, திருச்சி.

42. RM. மெய்யப்பன்
மீனாட்சி சர்வீஸ் ஸ்டேஷன்
5, டோல்கேட் திருச்சி.

43. AR. பழனியப்ப செட்டியார்
PL. RM. AR. வீடு, புதுவயல்.

44. SP. சுப்பிரமணியன்
H. 3, ஹவுசிங் யூனிட் சாலைரோடு,
திருச்சி.

45. S. பெத்தபெருமாள்
சண்முகநாதபுரம்
பாங்க் ஆப் மதுரை, காரைக்குடி.

46. V. R. முத்துக்கருப்பன்
A. E. T. N. E. B. Sub Station,
திருச்சி.

47. KR. கருப்பஞ் செட்டியார்
B. H. E. L. திருச்சி.

48. கரு. மாணிக்கம் செட்டியார்
C 2 N. E. E. தில்லைநகர், திருச்சி-18.

49. V. இராமநாதன் செட்டியார்
20, செப்பவயலார் தெரு, தேவகோட்டை.

50. சுப. வயிரவன் செட்டியார் (ராயவரம்)
6 வார்னர்ஸ் ரோடு,
கண்டோன்மெண்ட்

51. M. சிதம்பரம் செட்டியார், அ.மு.க. சித. வீடு
மார்க்கண்டேயன் கோவில் தெரு
காரைக்குடி.

52. சிவ. அ. சிவராமன் செட்டியார்
7. மெ. மெ. வீதி, காரைக்குடி.

53. அ. வள்ளியப்பன் J. E. T.N.E.B.
Sub Station, Trichy.

54. தி. முத்துராமன் செட்டியார்
2, லெக்ஷ்மிபுரம் தென்னூர் திருச்சி.

55. M. பழனியப்பன்
B 32 N. E. E.
தில்லைநகர், திருச்சி-18.

56. M. மெய்யப்பன்
B 32 N. E. E.
தில்லைநகர் திருச்சி-18.

57. நடராஜன் செட்டியார்
5 J. ராமச்சந்திரபுரம் தென்னூர்
திருச்சி-17.

58. சேதுராமன் செட்டியார்
C 61 9 A கிரூஸ், தில்லைநகர் திருச்சி-18.

59. M. காந்தி (ஆ, தெக்கூர்)
A. E. 230 K. V. பிராட்டியூர்.

60. பெ. சித. பெ. முத்துராமன் செட்டியார்
சண்முகநாதபுரம்.

61. SP. சிதம்பரம் செட்டியார்
வாணி பிலிம்ஸ், திருச்சி-2.

62. M. C. T. சிதம்பரம் செட்டியார்
சேலம்.

63. V. R. கிருஷ்ணன் செட்டியார்
நிர்மலா இண்டஸ்ட்ரீஸ்
இராமலிங்கநகர், புத்தூர் திருச்சி

64, SP. லெட்சுமணன்
66, தேர்வீதி, கரூர்.



சங்கத் தலைவர்

திரு. ST. AR. அருணசலம் செட்டியார்



செயலாளர் **RM. நாராயணன்**



செயலாளர்

**திரு. P. ராமசாமி**

துணைத் தலைவர்

திரு. S.AR. பழனியப்ப செட்டியார்



பொருளாளர்

**திரு. S. சுந்தரம்**



உ
சிவமயம்

M. Ct. MUTHIAH

Post Box No. 2713
MADRAS - 600002

11—4—1973

**மலர்க் குழுத் தலைவர்**
நகரத்தார் சங்கம்
நகர விடுதி
2, ஒத்தமால் தெரு
திருச்சிராப்பள்ளி - 2

அன்புடையீர்,

வணக்கம். திருச்சி நகரத்தார் சங்கம் தனது வெள்ளி விழாவினை யொட்டி மலர் வெளியிட விருப்பதை யறிந்து மனம் மகிழ்கிறேன். திரை கடல் ஓடித் திரவியம் தேடி, நானிலம் போற்ற வாழ்ந்த சமூகம் நம் சமூகம். இன்று இன்னல் அடைந்து இடர்படுகின்றது. அவ்வின்னலை அகற்றி இன்பம் எய்த ஆக்கம் பெற ஊக்கத்தோடு உழைக்கும் நகரத்தார் சங்கத்தின் பணி சிறக்கவும், சங்கம் வெளியிடும் மலர் மணக்கவும் எல்லாம் வல்ல இறையை வழுத்தி வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்,
**M. Ct. MUTHIAH.**

*A. V. Meiyappan*

Vadapalani P. O.
MADRAS – 600026

11—4—1973

**திரு. எம். செல்லப்பன் அவர்கள்,**
வெள்ளிவிழா மலர்க்குழுத் தலைவர்,
நகரத்தார் சங்கம்,
**திருச்சிராப்பள்ளி - 2.**

அன்புடையீர்,

தங்கள் 9—4—73 கடிதம் கிடைத்தது. மகிழ்ச்சி. திருச்சி நகரத்தார் சங்கம் கடந்த இருபத்தியைந்து ஆண்டு காலமாக ஆற்றிவரும் தொண்டு பெரிதும் போற்றுதற்கு உரியது. நற்றொண்டு புரியும் சங்கத்தவரை மனமாரப் பாராட்டு கிறேன். வெள்ளி விழாவினை ஒட்டி மலர் வெளியிடுவதை அறிந்து மகிழ்வுற்றேன். விழா மலர் மணம் நிறைந்து சிறப்புற வாழ்த்துகிறேன்.

தொடர்ந்து ஆக்கப்பணிகள் புரிந்து சங்கம் பல்லாண்டு வாழக் காலமும், இறையருளும் துணைபுரியட்டும்.

அன்புள்ள,
**ஏவி. மெய்யப்பன்.**

# Dr. Alagappa Chettiar Educational Trust

Mrs. Umayal Ramanathan
*Secretary*

KARAIKUDI - 623003
*(Ramanathapuram Dt.)*


## வாழ்த்துச் செய்தி

நகரத்தார் நலம் நாடும் சங்கங்கள் ஒவ்வொரு பகுதியிலும் அமைந்து வருவது நமது சமூகத்திற்குப் பெருந்துணையாகும். வாழ்க்கையில் முன்னேற விரும்பும் சமூக இளைஞர்களின் துடிப்பை உணர்ந்து சங்கங்கள் கல்வித்துறையிலும் கவனம் செலுத்தி வருதல் நலம் தரும். குறிப்பாக பெண்கள் அதிலும் திருமணம் நாடும் வயதினர்க்கு ஆக்கபூர்வமாக உதவி செய்ய மேற்கொள்ளும் எச்செயலும் எதிர்காலத்திற்கு ஏற்றம் தருவதாகும். அந்த வகையில் திருச்சியில் அமைந்துள்ள நகரத்தார் சங்கம் பெண்களுக்குப் பெரிதும் உதவ முன் வருதல் ஓர் ஆக்கப் பணியாகும் என்று நம்புகின்றேன்.

வெள்ளிவிழாவினை கொண்டாடும் இச்சங்கம் பொன்விழாவினையும் பொலிவுறக் கொண்டாட எல்லாம்வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

உமையாள் இராமனாதன்.

**M. A. M. RAMASWAMY, B. A.**

CHETTINAD HOUSE
RAJAH ANNAMALAIPURAM
MADRAS – 28.

23—3—1973.

திரு. எம். செல்லப்பன் அவர்கள்,
திருச்சிராப்பள்ளி.

அன்புடையீர்,

தங்கள் 12—3—73ஆ கடிதம் கிடைக்கப் பெற்றேன். மிக்க மகிழ்ச்சி.

திருச்சிராப்பள்ளியில் அமைந்துள்ள நகரத்தார் சங்கம் தன் நீண்ட பணியின் ஒரு பகுதியாக வெள்ளிவிழாவினைக் கொண்டாடுவது குறித்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். வெள்ளிவிழாவினை ஒட்டி சிறப்பு மலர் வெளிவருவது மிகப் பொருத்தமே.

மலரில் நம் நகரத்தார்களின் பெருமைகளையும், அவர்கள் ஆற்றிய பல்வேறு பணிகளின் சிறப்புகளையும் வெளியிட்டு மலர் ஒரு அழகு மிகுந்த கருத்துக் குவியலாக வெளிவர வேண்டுகிறேன்.

மலர் சிறப்புற அமைய என் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,
**மு. அ. மு. இராமசாமி.**

அ. மு. மு. அ., மதராஸ்.

"லாரல்ஸ்"
3, சித்தரஞ்சன் சாலை,
மதராஸ் - 18.

14—4—73

மலர்க் குழுத் தலைவர்,
திருச்சி நகரத்தார் சங்கம்,
2, ஒத்தமால் தெரு,
திருச்சிராப்பள்ளி-2.

அன்புடையீர்,

திருச்சி நகரத்தார் சங்கம், தனது வெள்ளிவிழாவினையொட்டி ஒரு மலர் வெளியிட இருப்பது அறிந்து மிக்க மகிழ்ச்சி.

திருச்சி நகரத்தார் சங்கம், நம் சமூகத்தினருக்காக ஆற்றியிருக்கும் தொண்டுகள் மிகவும் போற்றத்தக்கவைகளாகும். நமது சமூகத்தினருக்காக திருச்சியில் நகர விடுதி அமைத்திருப்பதும், நமது சமூகத்தில் வசதியின்மையினால் மணமாகாத பெண்களுக்கு, இயன்ற அளவில் உதவி செய்து, சிக்கனமாக, திருமணங்களை, நமது சமூகச் சடங்குகள் எதையும் விடாமல் நடத்தி வைத்திருப்பதும் பெருமைதரக்கூடிய செயல்களாகும். இவ்வண்ணம், இன்னும் பல நற்காரியங்களைச் செய்து, மேன்மேலும் பெருமை அடைய எல்லாம் வல்ல இறைவனின் அருள் கிடைக்க வேண்டுகிறேன்.

அன்புள்ள,

அருணாசலம்.

Dr. Rajah
Sir MUTHIAH CHETTIAR
OF CHETTINAD

Chettinad House, Adyar,
Rajah Annamalaipuram P. O,
MADRAS – 28,

12—4—73

திரு. எம். செல்லப்பன் அவர்கள்,
பழனியப்பா பிரதர்ஸ்,
திருச்சிராப்பள்ளி - 2.

அன்புள்ள ஐயா,

தங்கள் கடிதம் கிடைத்தது.

நமது திருச்சிராப்பள்ளி நகரத்தார் சங்கம் வெள்ளிவிழாக் கொள்ள இருப்பது குறித்து மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்.

தொன்மை வாய்ந்த இச்சங்கம் நம்மவர்கள் பலரின் கல்விப் பயிற்சிக்குப் பொருள் உதவிசெய்தும், நம்மவர்கள் பற்பலர் தங்குதற்கு விடுதி அமைத்தும், நம்மவர்களில் திருமணம் ஆகாமலிருக்கும் பெண்கள் - சிலருக்குத் திருமணம் செய்துவைத்தும், மேலும் பல வகைகளிலும் அரும்பணிகள் ஆற்றிவருவது போற்றுதற்குரியது.

சங்கத் தலைவர் நம் மதிப்பிற்குரிய நண்பர் திரு. எஸ். டி. ஏ. ஆர். அருணாசலஞ் செட்டியார் அவர்களும், துணைத்தலைவர், செயலாளர்கள், பொருளாளர் முதலியவர்களும், மற்றவர்களும் சங்க வளர்ச்சிக்குச் செய்துவரும் தொண்டுகள் மிகவும் பாராட்டுதற்குரியன.

சங்கம் இத்தகைய நற்பணிகள் பலவற்றைத் தொடர்ந்து செய்து மேன்மேலும் வளர்ச்சிபெறப் பிரார்த்திக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள,

**முத்தய்யா செட்டியார்.**

உ

# KUMARI MALAR

100 MOWBRAY'S ROAD P. B. No. 1455 ALWARPET MADRAS - 18

21—3—1973

அன்பு நிறைந்த,

ஸ்ரீ எம். செல்லப்பன் அவர்களுக்கு,

நமஸ்காரம். தங்கள் கடிதம் கிடைத்தது. வந்தனம்.

திருச்சி நகரத்தார் சங்க வெள்ளி விழா மலர் வெளியிடுவது அறிய மகிழ்ச்சி.

பேச்சளவில் நில்லாது, செயலில் இரண்டு திருமணங்களை நிறைவேற்றிய சங்கத்தின் பணி மிகவும் போற்றத் தக்கது. தொடர்ந்து இப்பணி செய்ய இறைவன் அருள்வானாக.

தங்கள் மாறாத அன்புக்கு நன்றி.

அன்பு மறவாத,

ஏ. கே. செட்டியார்.

*A. Nagappa Chettiar*
MANAGING DIRECTOR
THE INDIA LEATHER CORPORATION PRIVATE LTD.,
MADRAS.

"INDIA LEATHER MANSIONS"
G. P. O. BOX NO. 1516
9, DAVIDSON STREET, MADRAS-1.

மார்ச், 22, 1973

நகரத்தார் சங்கம்,
"நகர விடுதி"
2, ஓத்தமால் தெரு,
திருச்சிராப்பள்ளி-2.

அன்புடையீர்,

நிகழும் 1973-ம் ஆண்டு மேத்திங்கள் வெள்ளிவிழாக் காணும் நமது சங்கத்தின் அழைப்பு மடலும், இருபத்தைந்து ஆண்டுகளில் சிறப்புறப் பணிசெய்து வளர்ச்சியுற்ற பெருமை நிறைந்த ஏடும் கிடைத்தது. நெஞ்சம் நிறைந்த மகிழ்ச்சி.

"செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது"

என்ற குறள் நெறியையும், சங்கம் ஆற்றிய பெரும் பணியையும் ஒன்றிணைத்துப் பார்க்கும்போது அறம் வளர்த்த நம் உயர் குலத்தின் சேவை மனமும் தியாக உணர்வும் ஒன்றிணைந்து அருள் பழுத்த பழச் சுவைபோல் இனிக்கிறது. வளர்பிறை போல் வளர்ந்துவரும் சங்கம் அறிவறிந்த மாணவர்களை வளர்த்துத் தந்து, நம் குலம் நாட்டின் நற்குலமாகச் செழித்து வாழ, தொடர்ந்து அருந்தொண்டு ஆற்ற எல்லார்க்கும் புத்துணர்வையும் நிறைந்த சத்தியையும் கொடுக்க எல்லாம் வல்ல தில்லை அம்பல அரசனை வேண்டி இதயம் குளிர வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்
தங்கள் அன்புள்ள,
**ஆ. நாகப்பன்**

உ
சிவமயம்


''தமிழ்க்கடல்'', ''வண்கவி வள்ளல்''
''சிவமணி'', ''சிவம் பெருக்கும் சீலர்''

**ராய. சொக்கலிங்கன்**

**காரைக்குடி - 1**
**இராமனுதபுரம் மாவட்டம்**


*23 — 4 — 73.*

அன்புடையீர்,

தங்கள் மடல்கள் இரண்டும் கிடைத்தன.

திருச்சிராப்பள்ளி நகரத்தார் சங்கம் மணம் புரிந்துகொள்ள வழி இல்லாதவர்களுக்கு மணம் கண்டு மகிழ முனைந்திருப்பதுபற்றியும், வெளியூரிலிருந்து வருகின்ற நகரத்தார்கட்குத் தங்க விடுதி அமைத் திருப்பதுபற்றியும், மேலும் சமூக நலன் கருதி நல்ல பணிகள் புரிந்து வருவது குறித்தும் மிக்க மகிழ்ச்சி அடைகின்றேன்.

வெள்ளி விழாக் காணும் இச்சங்கம் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்து, ஏராளமான நற்பணிகள் புரிந்து, உயர்ந்து இன்னும் பல நல் விழாக்கள் காண எல்லாம் வல்ல இறைவன் அருள்வானுக.

**ராய. சொ.**

உ
சிவமயம்

K. NK. T. KLANG

கி. நக. த. கிள்ளான்

நகரத்தார் சங்கம்
திருச்சிராப்பள்ளி

14—5—73

அன்புடையீர்!

தாங்கள் அன்புடன் அனுப்பிய தங்கள் சங்கத்தின் 25-வது ஆண்டு வெள்ளிவிழா அழைப்புக் கடிதம் வரப்பெற்று மகிழ்வுற்றோம்.

தங்கள் சங்கம் தாயகத்தில் தொன்மை வாய்ந்ததோடு தங்கள் கடிதமூலம் சங்க ஆதரவில் நம் சமூகத்துப் பிள்ளைகளுக்குக் கல்வி உதவி வழங்கியும், வசதிக் குறைவான குடும்பத்துத் திருமணங்களைச் சிறப்புற நடத்தி வைத்தும், சங்கத்தில் வெளியூர் நகரத்தார்கள் தங்கிச்செல்ல வசதிகள் செய்யப்பட்டும் காலத்தை அறிந்து அரியபல நற்பணிகள் செய்துவரும் திருச்சிராப்பள்ளி நகரத்தார் சங்க உறுப்பினர்களையும் நிர்வாகஸ்தர்களையும் உளம்கனிய பாராட்டியும் தங்கள் சங்க வெள்ளி விழா சிறப்புற நிகழவும் துடர்ந்து நம் சமூகத்தவருக்கு நல்ல பல பணிகள் செய்து ஆக்ககரமாக திகழ ஸ்ரீ தெண்டாயுதபாணி அருள் பாலிக்கவேண்டி வாழ்த்துகிறோம்.

இங்ஙனம்,

**கிள்ளான் நகரத்தார்கள்.**

# எங்கள் கதை

செட்டி நாட்டின் பல்வேறு பகுதி களிலிருந்து திருச்சி நகரத்திற்கு வந்து வாழ்வோர் பெருகிக் கொண்டே இருந்தகாலம். தொழில் புரிவோர் பலர்; அந்த நிறுவனங்களில் பணிபுரி வோர் இன்னும் பலர். இது தவிர வங்கிகள் அரசு அலுவலகங்கள் போன்றவற்றில் பணி புரிவோரின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டே வந்தது. பள்ளிகள், கல்லூரிகள் முதலியவற்றில் பயிலும் மாண வர்களோ எண்ணிலடங்கா. ஒரே பண்பாடு, கலாச்சாரம் உடைய நமது இனத்தவர்கள் சந்திப்பது என்னவோ கடை வீதியிலோ அல்லது பாங்கு, சினிமாக் கொட்டகைகளிலோ அல்லது புகைவண்டி நிலையமோ, பேருந்து நிலையமோ தான். இந்த அமைதியற்ற சூழ்நிலையில் எவ்வாறு கருத்தைப் பறி மாறிக்கொள்வது? எனவே நகரத்தார் பெருமக்கள் மாதம் ஒன்று இரண்டு முறை ஒரு இடத்தில் சந்தித்து அள வளாவவும் வாழ்க்கை, படிப்பு, பண்பாடு, தொழில், வியாபாரம், பாங்கு முறை முதலியவற்றைப் பற்றி பேசவும் ஒரு நிறுவனம் ஒன்று தேவை என எண்ணினர், இந்நகரின் கண் வாழ்ந்த நகரத்தார் பெருமக்கள். அதன் பயனாக **10—9—48 வெள்ளிக்கிழமை** அன்று கூடி **'திருச்சி நாட்டுக் கோட்டைச் செட்டியார் சங்கம்'** என்று ஒரு சங்கத்தை நிறுவி னார்கள். இச்சங்கத்தின் தலைவராக காலம் சென்ற மு. அ. அருணாசலம் செட்டியார் அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். உபதலைவராக முத்து மு. முத்துக்கருப்பஞ் செட்டியார் அவர்களும் காரியதரிசிகளாக ஆவி. க. சோமசுந்தரம் செட்டியார் அவர்களும், சு. ராம. சுப. சுப்பய்யா செட்டியார் அவர்களும் பொருளாளராக திரு. வயி. அ. வயிரவன் செட்டியார் அவர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் சமூக வியாபாரம், தொழில் முதலியவைகளின் நலன்களைப் பாதுகாப்பதும் சமூக சீர் திருத்த முன்னேற்றத்திற்குப் பாடுபடுவதும் அதற்கு வேண்டிய ஒத்தாசைகளை அங்கத்தினர்கள் செய்வதும், தமிழ்மொழி, பேச்சுக்கலை இவைகளின் முன்னேற்றத்திற்கான முயற்சிகளைச் செய்வதும், நூல்நிலையம் ஆரம்பிப் பதும், நமது சமூக மாணவர்கள் கல்வி முன்னேற்றத்திற்கும் மேல் படிப்புகளுக்கும் வேண்டியவைகளைச் செய்து கொடுப்பதும், மேல் படிப்புக்குச் செல்லும் மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் முடிந்தவரை தேடிக்கொடுப் பதும் இச்சங்கத்தின் உயரிய நோக்கங்களாக அமைந்தன.

முதலில் ஆவி. க. பாங்கில் இடம் தரப்பட்டது. காலஞ்சென்ற ஆவி. க. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் இதற்கு ஆக்கமும் ஊக்கமும் தந்தார்கள். மு. அ. அருணாசலம் செட்டியார் அவர்கள் முதல் தலைவராக இருந்து அவர்களுடைய முதிர்ந்த அறிவையும் தேர்ச்சியான அனுபவங்களையும் கொண்டு சங்கத்தின் மூலம் நம்மவர்களின் கல்வி, அறிவு வளர்ச்சி, வாணிபம், கைத்தொழில், சமூக சீர்திருத்தம் போன்ற எல்லாத்துறைகளிலும் முன்னின்று வழிகாட்டி வந்தார்கள். அன்னாருக்குப் பிரியாத் துணையாகவும்,

தூண்டு கோலாகவும் இருந்து செயல் செய்து வந்தார் செயலர்களில் ஒருவ ராகிய காரைக்குடி சு. ராம. சு. சுப்பையா செட்டியார்.

நம் சமூகத்தினரிடையே சமூக சீர்தி ருத்தம் மிக முக்கியமென்று கருதி சங்கம் சில தொண்டுகள் செய்தன. 2—2—49 அன்று காரைக்குடியை அடுத்த மாத்தூர் என்ற இடத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங் கத்தின் முதலாவது மகாநாடு கூடிற்று. அதற்கு நமது சங்கத்திலிருந்து பல சமூக சீர்திருத்த தீர்மானங்கள் நிறை வேற்றி மாத்தூர் மகாநாட்டுக்கு அனுப்பிவைத்து வேண்டிய உதவியும் செய்தது.

இதில் இடம் பெற்ற முக்கிய தீர் மானங்களில் பல இன்று நமது சமூகத் தினரால் ஒப்புக்கொள்ளப்பட்டு இன்று கடைப் பிடிக்கப்பட்டு வருகிறது. இதில் 6-வது தீர்மானமாகக் கண்டுள்ள புதுக்கோட்டையை ஒருதனி மாவட்ட மாக ஆக்கி, புதுக்கோட்டையைத் தலை நகராக ஆக்க வேண்டுமென்ற தீர் மானம் இன்று அரசினரால் ஒப்புக் கொள்ளப்பட்டு இந்தத் தைத்திங்கள் முதல் புது மாவட்டமாகத் திகழ்கிறது என்பதை இச்சங்கம் பெருமையுடன் கூறிக்கொள்கிறது.

1—4—51 அன்று கூடிய சங்கக் கூட்டத்தில் நமது சமூகத்தினர்கள் கல்வி வளர்ச்சிக்காகத் தனியே ஒரு சங்கம் "Chettiars Education Association" என ஒன்று நிறுவி அதன் மூலம் கல்வி வளர்ச்சிக்கு "Loan Scholarship" உபகாரச்சம்பளம் கொடுத்து உதவு வது எனவும் தீர்மானித்து அதற்கு சா. ராம. சித. பழநியப்பச் செட்டியார் அவர்கள் தலைவராகவும், சு. ராம. சு. சுப்பையா செட்டியார் அவர்கள் செய லாளராகவும் இருந்து பல ஆண்டுகள் தொடர்ந்து பணிபுரிந்து வந்தனர். இந்த ஸ்தாபனத்தின் மூலம் பல இளைஞர்கள் பலன் பெற்று முன்னுக்கு வந்துள்ளனர். இன்று நல்ல நிலையில் இருந்து சமூகத்திற்குத் தொண்டு செய்து வருகின்றனர்.

இந்த செட்டியார் கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு நிதி உதவி கொடுத்து உதவிய ராஜா சர். முத்தையா செட்டி யார், கானாடுகாத்தான்; சா. ராம. சித. பழநியப்ப செட்டியார், கானாடுகாத் தான்; தி. சு. பழ. சிதம்பரம் செட்டி யார், தேவகோட்டை; சா. ராம. அரு. ராமனாதன் செட்டியார், கானாடுகாத் தான்; ராணி அண் கம்பெனி, சென்னை; R. இராமநாதன் செட்டியார், கானாடு காத்தான்; ஏ. வி. எம். மெய்யப்பச் செட்டியார், சென்னை; வயி. அ. வயிரவன் செட்டியார், கண்டனூர்; மெ. செ. மெ. மெ. மெய்யப்பச் செட்டி யார், காரைக்குடி; AR. அண்ணாமலை செட்டியார், பள்ளத்தூர்; R. இரத்னம் செட்டியார், பள்ளத்தூர்; பெரி. கும. பெரிய கருப்பன் செட்டியார், கடியா பட்டி; பெரி. நா. பெரிய கருப்பன் செட்டியார், கடியாப்பட்டி; பி. கு. நா. வைரவன் செட்டியார், கடியாப்பட்டி; P. S. S. சாத்தப்ப செட்டியார் மெமோரியல் சாரிடீஸ் ட்ரஸ்ட், கோவை; முதலியோருக்கு இச்சங்கம் என்றும் கடமைப்பட் டுள்ளது.

மாவட்டத்திலுள்ள லேவாதேவிக் காரர்கள் அனைவரையும் அங்கத்தினர் களாகச் சேர்த்து திருச்சிராப்பள்ளி மாவட்ட லேவாதேவிக்காரர்கள் சங்கம் ஒன்று நிறுவ 5-10-55-ல் ஒரு கூட்டம் கூடி தீர்மானம் செய்யப்பெற்றது. இன்று இயங்கிவரும் திருச்சிராப்பள்ளி அடகு பிடிப்போர் கடன் வழங்கு

வோர் கழகத்திற்கு நமது சங்கம் வித்தாக இருந்தது குறித்து பெருமகிழ்வு எய்துகிறது.

இச்சங்கத்தின் மாதாந்திரக் கூட்டங்களில் திருச்சி பிரமுகர்கள் ஜில்லா அலுவலர்களைக் கூட்டி அங்கத்தினர்களுக்கு அறிமுகம் செய்து வைத்தும், அவரவர்கள் இலாக்காக்களைப்பற்றி அளவளாவவும் உதவி செய்தது.

இதோடு நில்லாது இந்நகரப் பெருமக்களையும் உரிய காலங்களில் போற்றிப் பெருமைப்படுத்தியது. திரு. கி. ஆ. பெ. விசுவநாதம், முன்னாள் நகராட்சித் தலைவர் எட்வர்ட் பால் மதுரம், சீதாலெட்சுமி ராமசாமிக் கல்லூரி நிறுவனர் N. ராமசாமி ஐயர், அண்ணாமலை பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் ராவ்பகதூர் T. M. நாராயணசாமி பிள்ளை முதலியோரை இச்சங்கம் பாராட்டியது. நமது சமூகப் பெரியார்களையும் அவ்வப்போது அழைத்துப் பாராட்டியது. திருவாளர்கள் சா. கணேசன், R. இராமனாதன் செட்டியார், திரு. A. V. மெய்யப்பச் செட்டியார், ராஜா சர். முத்தையா செட்டியார், திரு. அழகுசுந்தரம் செட்டியார், P. S. S. சாத்தப்பச் செட்டியார், திரு. A. நாகப்பச் செட்டியார், அ. மு. மு. முருகப்பச் செட்டியார், M. V. அருணாசலம் செட்டியார், L. நாராயணஞ் செட்டியார், T. சுந்தரம் செட்டியார், சென்னை நகர முன்னாள் ஷெரீப் A. M. M. ராமசாமி செட்டியார் முதலியோரை அழைத்து கௌரவித்தது.

24—7—62ல் கூடிய பொதுக்குழுக் கூட்டத்தில் திருச்சி நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்கம் என்ற பெயரை பலருடைய விருப்பத்திற் கிணங்க "நகரத்தார் சங்கம்" என மாற்றியமைக்கப்பட்டது. புதிதாக உயர்தரப்படிப்புக்கு மாணவர்களுக்குப் பண உதவி செய்யப் பணம் சேர்க்கவும், ஏற்கனவே சங்கத்தின் மூலம் பணம் சேர்த்து செட்டியார்கள் கல்வி வளர்ச்சிக் கழகத்திற்கு (Chettiars Education Assn.) கொடுத்திருப்பதை ஒன்று சேர்த்து விரிவாக நடத்தவும் ஒரு புதுக்குழுவும் நியமிக்கப்பட்டது. புதிதாக அமைக்கப்பட்ட நகரத்தார் சங்கம்.

1. நகரத்தார் இனத்தவர்களின் ஒற்றுமை, கல்வி, கைத்தொழில், வியாபாரம், விவசாயம் முதலியவைகளில் முன்னேற்றத்திற்கு ஆவன செய்தல், சிறப்பாக மாணவர்களுக்கு உபகாரச் சம்பளம் கடனாகக் கொடுத்து உதவி செய்தல்.

2. நகரத்தார் வாழும் நகரங்களில் அரசியல், சுகாதாரம், பொதுநலம், சமூக சேவை, வியாபாரம், கைத்தொழில், முதலிய துறைகள் செழிக்க வேண்டுவன செய்து அதனதன் ஆட்சியில் நமக்கு உரிய இடம் பெற்று ஒத்துழைத்தல்.

3. மேற்கண்ட நோக்கங்களை நிறைவேற்ற சந்தா, நன்கொடை, மகமை மூலமாகப் பொருள் சேகரித்தல்.

4. நகரத்திலுள்ள இதர சமூகத்தினருடன் ஒத்துவாழ்தல்.

முதலியவற்றைத் தனது புதிய நோக்கங்களாகக் கொண்டது. பன்னெடுங்காலம் நற்றொண்டு ஆற்றிய மு. அ. அருணாசலம் செட்டியார் அவர்கள் மறைந்தமையால் 16—1—67-ல் திரு ஆவி. க. ஆவிச்சி செட்டியார் அவர்களைப் புதிய தலைவராகத் தேர்ந்தெடுத்து இளைய சமுதாயத்தினரின்

புத்துணர்ச்சியோடு சங்கம் செயல்படத் தொடங்கிற்று. திரு. S. அண்ணுமலை, ஏஜண்ட், இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க் S. சுந்தரம் உரிமையாளர் உஷா ரேடியோ, PS. PL. மெய்யப்பன், ஏஜண்ட் பாங்க் ஆப் பரோடா ஆகியோர் தலைவருடன் சேர்ந்து செய்த சேவைகள் என்றும் மறக்கற்பாலது அன்று.

காசி முதல் கன்னியாகுமரி வரை சத்திரங்கள் அமைத்த நம் நகரத்தார் பெருமக்கள் ஏனோ சமயப் புகழ் நிறைந்த திருச்சிராப்பள்ளியில் "நகர விடுதி" எதுவும் அமைக்காது விடுத்தனர். இக்குறையை நிவர்த்திக்க நினைத்து, 1967-ம் ஆண்டு நவம்பர் மாதம் 5-ம் தேதி மதுரை திரு. லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் தலைமையில் இவண் தமிழ் சங்கக் கட்டிடத்தில் நடந்த சிறப்புக் கூட்டத்தில் நம் சங்கத்திற்குக் கட்டிடம் அமைக்க வேண்டும் என்ற யோசனையைக்கூறி நம் சங்கத்தலைவர் திரு. ஆவி. க. ஆவிச்சி செட்டியார் அவர்கள் முதன் முதலில் ஒரு துகையை அறிவித்தார்கள். கட்டிடத்திற்காகத் திரட்டும் நிதியின் ஒருபகுதியைக் கல்வி வளர்ச்சிப் பணிக்குப் பயன்படுத்தலாம் என்றும் ஒப்புக் கொள்ளப்பெற்றது.

1968-ம் வருடம் மே மாதம் 25-ம் தேதி நடந்த செயற் குழு கூட்டத்தில் சங்கநிதி திரட்டுவதற்கு குமாரி "வெண்ணிற ஆடை" நிர்மலாவின் நடன நிகழ்ச்சி நடத்துவதென்று தீர்மானித்து பொருளாளர் திரு PS. PL. மெய்யப்பன் அவர்கள் தலைமையில் குழுவொன்று அமைத்து ஆவன செய்யும் பணியில் தீவிரமாக இறங்கினர். திருச்சி, முசிறி, கரூர், குளித்தலை, மணப்பாறை ஆகிய ஊர்களில் கொடுக்கல் வாங்கல் தொழில் செய்யும் நம்மவர்களை அணுகி உதவி நாடினர்.

நம்மவர் தவிர மற்ற சமூகத்தினரும் நடன நிகழ்ச்சி டிக்கட்டுகளைப் பெற்று நம்முயற்சிக்கு உதவினர். குறிப்பாக கல்வி வளர்ச்சி நிதிக்கு பிறர் சமூகப் பெரியார் ஒருவர், பெருந்தொகை தந்து உதவியது இங்கு குறிப்பிடத்தக்கது.

நிதி திரட்டும் பணியில் நிர்வாகக் குழுவினர் ஏனைய நண்பர்கள் அனைவரும் ஒருமனதாய் ஈடுபட்டு பெரும் வெற்றி பெற்றனர் என்பது பெருமிதத்துடன் குறிப்பிடத்தக்கது.

நடன நிகழ்ச்சி வசூலில் செலவு நீக்கி மீதியிருந்த துகையில் ரூ. 10,000/- கல்வி வளர்சி நிதியாக குந்தாரா அலுமனியம் கம்பெனியில் டெபாசிட் செய்யப்பெற்றது.

மீதம் இருந்த துகையுடன் திரு AR. அண்ணுமலை செட்டியார் அவர்கள், திரு. ஆவி. க. ஆவிச்சி செட்டியார் அவர்கள், திரு. RM. நாராயணன் அவர்கள், திரு S.O. RM. கணபதி அவர்கள் பிரதிப்பிரயோசனம் இல்லாமல் தந்த கடன் உதவியுடனும் நகர விடுதியாகச் செயல்பட கட்டிடம் வாங்கப் பெற்றது. பின்னர் தனியார் கடன்களைத் திருப்பிக் கொடுக்கப் பெற்றது.

இவ்வாறு பெற்ற கட்டிடத்தை நகர விடுதிக்கான வசதிகள் நிறைந்ததாகச் செய்ய எண்ணி, பொருளுதவி நாடி மலேயா வாழ் நம் நகரத்தார் பெருமக்களுக்குக் கடிதங்கள் எழுதப் பெற்றன. அவ்வமயம் இந்நகர் உயர்திரு ST. AR. அருணுசலம் செட்டியார் அவர்கள் மலேயாவில் இருந்தபோது நம் முயற்சிக்குப் பெரும் ஆக்கம் அளித்ததன் காரணமாகவும் நண்பர் PR. அண்ணுமலை அவர்களும்

ஏனைய சிலரும் மலேயா வாழ் நகரத்தார் சங்க நிர்வாகிகளுக்கு நம் முயற்சியின் சிறப்பையும், அதன் வழி ஈடுபட்டுள்ள இளம் உள்ளங்களின் நேர்மையையும், முறையாக எடுத்துக் கூறியதன் விளைவாகவும் நம் சங்கம் பெருநிதி பெற்று நகர விடுதியில் நவீன வசதிகள் அமைத்து நலன் பல காண முடிந்தது.

மேல்கண்ட கட்டிட நிதிக்கு முன்னாள் தலைவர் திரு. ஆவி. க. ஆவிச்சி செட்டியார் அவர்கள் ரூ. 1001/- எழுதி நிதி திரட்டும் பணியைத் துவக்கி வைத்தார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

சமயப் பணியில் புகழ் பெற்ற நம்மவர் கல்விப் பணியிலும் கருத்து செலுத்தத் தவறியதில்லை.

குந்தரா அலுமினியம் கம்பெனியில் டெபாசிட் செய்துள்ள நிதியிலிருந்து வட்டித்துகை கொண்டு சிறு அளவில் கல்வித் தொண்டு செய்து வருகின்றோம். இத்தொண்டை கவனித்து செயலாற்ற சங்கத் தலைவர் தலைமையில் திரு. RM. நாராயணனை செயலாளராகக் கொண்டு ஒருதனி கல்விக்குழு அமைத்து திறம்பட செயல்பட்டு வந்தது.

பணி பெரிது, நிதியோ குறைவாக உள்ளது. தேவையின் அளவு கருதுமிடத்து நாம் நம் சமூகச் செல்வர் பலரை நாடி பெருந்துகை சேர்த்து செயல்பட்டாலன்றி கணிசமான சேவை செய்ய இயலாது.

கல்விப்பணி குறித்து கூறும் இத்தருணம் முன்னாள் ''செட்டியார் கல்வி வளர்ச்சிக் கழகம்'' என்ற பெயரில் இயங்கிய நிறுவன நிதியை நம் சங்கம் வாயிலாகச் செயல்பட உதவிய நம் சமுகப் பெரியார் காலஞ் சென்ற திரு. S. RM. CT. PL. பழநியப்பச் செட்டியார் அவர்களின் ஒத்துழைப்பையும், ஆதரவுகலந்த ஆசியையும் நாம் மறப்பதற்கில்லை. இம்முயற்சியில் நமது முன்னாள் தலைவர் காலஞ் சென்ற திரு. M. A. அருணாசலம் செட்டியார் அவர்களின் புதல்வர் திரு. AR. அண்ணாமலை செட்டியார் அவர்களின் உறுதுணையையும் நம் சங்கத்தின் ஏனைய அலுவல்களில் அவர்கள் காட்டிய அக்கறையையும் இங்கு குறிப்பிட விரும்புகிறோம். கல்விப் பணிக்கு ஆண்டு ஒன்றுக்கு ரூ. 1000 - விகிதம் ஐந்து ஆண்டுகளுக்கு நம் சங்கம் மூலம் திரு. M. A. M. ராமசாமி அவர்கள் நன்கொடை அளித்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

நம் சமூகத்தவர்கள் சங்க நிகழ்ச்சியில் ஆர்வமுடன் ஈடுபடுதல் அவசியம் என்பது கருதி உற்சாக மூட்டும் நிகழ்ச்சிகள் பல, மாதம் தோறும் ஏற்பாடு செய்யப்பெற்றது.

நம் சமூகத்தினருக்கே உரித்தான பிள்ளையார் நோன்பு விழாவை 1971-ம் ஆண்டு முதல் நம் சங்கக் கட்டிடத்தில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்று வருகிறது. அந்நிகழ்ச்சியில் நம் சமூக ஆண்களும், பெண்களும், பிள்ளைகளும் பெருமளவில் பங்கு கொண்டு மகிழ்கின்றனர். சமூகத்திற்கே சிறப்பான தின்பண்ட வகைகள் சிறந்த முறையில் தயாரிக்கப்பட்டு பரிமாறப் பெறுகின்றன.

இவ்வாறு கல்விப் பணியும் சமூகப் பணியும் செய்து வந்த இச்சங்கம் திரு. ST. AR. அருணாசலம் செட்டியார் அவர்கள் தலைமைப் பதவி ஏற்றதும் அவரது சீரிய முயற்சியினாலும், ஆர்வத்தினாலும் சங்கமே முன் நின்று பண முடையினால் திருமணமாகாத பெண்களுக்குத் திருமணம் செய்து வருகின்றமை குறிப்பிடத்தக்கது.

# We in the eyes of foreigners

According to Francis, " Of all the Chettis, perhaps the most distinctive and interesting are the Nattukkottai Chettis, who are wealthy money-lenders with head quarters in the Tiruppattur and Devakottai Division of the Sivaganga and Ramanathapuram Zamindaris". They are the most enterprising of all the trading castes in the South, travelling freely to Burma, the Straits Settlements and Ceylon and having in some cases correspondents in London and on the Continent. It has been said that Nattukkottai Chettiars, in organisation and business methods are as remarkable as European merchants. They are the important community in the District.

* * *

In the words of Mr. Thurston: " The Nattukkottai Chettis, in organisation, Co-operation and business methods are as remarkable as the European Merchants ".

* * *

Sir Harcourt Butler, then Governor of Burma, in a speech addressing Nattukkottai Chettiars said, " You represent a very important factor indeed in the life of this province. Without the assistance of the Chettiar banking system, Burma would never have achieved the wonderful advance of the last 25 to 30 years. The Burman today is a much wealthier man than he was 25 years ago and for this state of affairs, the Chettiars deserve his share of thanks ".



# ஆக்கி வைப்போம் நல்லுலகம்

**செல்ல கணபதி M.A., கண்டனூர்.**

செட்டியார் என்பவர்கள் செட்டாக வாழ்பவரோ

செட்டாக வாழ்ந்ததினால் செட்டியார் ஆனவரோ

எட்டாத தொலைகள்என்ன எங்கிருந்த போதுமென்ன

எக்காள மிடும்கடலில் தன்வாழ்வைப் பணயம்வைத்தார்

எட்டிஉதைக் கின்றபிள்ளை பாசமென்ன தாபமென்ன

இன்முகத்தை மறந்திருந்தால் தன்மனைவி கோலமென்ன

கட்டிவைத்த வீடுமனை கட்டில்மெத்தை சுகங்களென்ன

கருதாமல் கடல்கடந்து கண்ணியத்தால் நிலைத்தவர்கள்

வக்கற்ற பேர்களுக்கு வாகாக முதல்கொடுத்து

வாழவைத்துத் தான்வாழ வட்டியினைப் பெற்றவர்கள்

திக்கற்ற பேர்களுக்குத் திரவியத்தைக் கொடுத்ததினால்

திடமான சமுதாயம் உருவாக்கி வைத்தவர்கள்

ஆதாயம் இருமடங்கு அடைகின்ற வாணிபத்தில்

அவன்வாழப் பொருள்கொடுத்துத் தான்வாழ வட்டிபெற்றார்

பாதாளம் கிடந்தவர்க்குப் பணம்என்ற ஏணிதந்து

பாங்காக அவன்உயர்ந்தால் பதிலுக்கு வட்டிபெற்றார்

ஒருநூறைக் கொடுத்தார்கள் ஒன்பது நூறானவுடன்

உவகையுடன் வாங்கியவன் இருநூறைக் கொடுத்திருப்பான்

உருவாக உதவிசெய்தார் உருவாகி வளர்ந்தபின்னே

உருவாக்கி வைத்ததற்குப் பதிலாக வட்டிபெற்றார்

வங்கிகளின் வேலையென்ன வாங்கிக் கொடுப்பதுதான்

வட்டிபெரு விடில் எந்த வங்கிகள்தான் நிலைத்திருக்கும்

நாடுவிட்டு நாடுசென்று பிறநாட்டார் குணமறிந்து

நல்லவரைக் கெட்டவரை நயமாகப் பகுத்துணர்ந்து

பாடுபடும் மக்களுக்குப் பாங்காக முதல்கொடுத்து

பங்காளி யாகியவன் பக்கமாய்த் தோள்கொடுத்து

அந்நாட்டுப் பொருளாதா ரத்தினையும் உயர்த்திவைத்து

அடக்கமாய் வாழ்ந்துவிட்டுப் பெரும்பொருளைச் சேர்த்துவைத்து

தாய்நாடு திரும்பியவர் தனவணிகர் எம்குலத்தார்

தன்நாட்டை மேம்படுத்தத் தாளாமல் உழைத்தவர்தான்

வாய்கிழிய அரற்றுபவர் வட்டியென ஏசுகிறார்

வட்டியெனும் சொல்லுக்கு வடித்ததொரு பொருள்அறியார்
இந்திரா காந்தியம்மா இன்றெல்லாம் சொல்வதென்ன
இல்லாத ஏழைக்கு வங்கிகளைக் கொடுஎன்றார்
வங்கியென்ன சும்மாவா வாரி வழங்கிவிடும்
வட்டிக்குத் தான்ஐயா வங்கிகளும் பணம்கொடுக்கும்
எம்குலத்தார் என்னசெய்தார் இருப்பவர்க்கா பணம்கொடுத்தார்
இல்லாத பேருக்கு அவன்தகுதி பார்த்தறிந்து
தம்பணத்தைக் கொடுத்து (அ)வனின்தரத்தை மேம்படுத்தி
தாஎன்றார் வட்டியினை வாங்கியவன் கொடுத்திருந்தான்
குலத்தொழிலாய் போனதினால் வேறுதொழில் அறியவில்லை
குவிக்கின்ற மிடிமையினைக் கொள்ளவில்லை எம்குலத்தார்
ஆலைகட்டி வைத்திருந்தால் ஆதாயம் எப்படியோ
அறியத் தொடங்கிவிட்டோம் ஆனவரை முயன்றிடுவோம்
இல்லாத பேர்க்கெல்லாம் என்றே வழங்கியவர்
இல்லையெனும் சொல்லுக்கு அவரே இலக்கானார்
இருந்தால் இருக்கட்டும் இனித்தான் எம்காலம்
ஆனவரை பார்த்திடுவோம் ஆக்கிவைப்போம் நல்லுலகம்
இலக்(கு)ஒன்றே நமக்கெல்லாம் இல்லாமை ஒழிவதுதான்
ஏழைபணக் காரனெனும் வேற்றுமைகள் தொலைவதுதான்
இருப்பவர்கள் வாழட்டும் ; இல்லாத பேர்களையும்
இருப்பவராய் ஆக்குவதே இனிநமது தனிக்கொள்கை.



# எங்கள் கட்டிட நிதிக்கு உதவிய பெருமக்கள்

| | | ரூ. |
|---|---|---|
| திரு. | சா. ராம. சித. பழ. பழநியப்ப செட்டியார் | 2501 |
| ,, | மு. அ. மு. காசிச் செட்டியார் | 1251 |
| ,, | ஆவி. க. ஆவிச்சி செட்டியார் | 1001 |
| ,, | அரு. அண்ணாமலை செட்டியார் | 1001 |
| ,, | வயி. அ. வயிரவன் செட்டியார் | 1001 |
| திருமதி. | பொன்னம்மாள் அருணாசலம் | 1001 |
| திரு. | பழநியப்பா பைனான்ஸ் கார்ப்பரேஷன் | 751 |
| ,, | P. V. A. L. வயிரவன் செட்டியார் | 750 |
| ,, | ப. ராம. செ. செல்லப்ப செட்டியார் | 501 |
| ,, | சித. அரு. அருணாசலம் செட்டியார் | 501 |
| ,, | பழநியப்பா பிரதர்ஸ் | 501 |
| ,, | AM. KM. CT. முத்துக்கருப்பன் செட்டியார் | 501 |
| ,, | N. SP. கார்ப்பரேஷன் | 501 |
| ,, | PV. PL. நாராயணன் செட்டியார் | 501 |
| ,, | ஈப்போ நகரத்தார் | 501 |
| ,, | உ. ராம. மெ. சு. மெ. சேவு | 351 |
| ,, | RM. A. ராம. ராயவரம் | 351 |
| ,, | A. AL. சுப்பையா செட்டியார் | 301 |
| ,, | அரு. மு. அ. அருணாசலம் செட்டியார் | 301 |
| ,, | S. A. R. பழநியப்ப செட்டியார் | 301 |
| ,, | சித. வயி. சித. சிதம்பரம் செட்டியார் | 301 |
| ,, | வீர. கரு. லெ. லெட்சுமணன் செட்டியார் | 301 |
| ,, | சுப. பொ. அண் கோ | 301 |
| ,, | S. O. RM. கணபதி செட்டியார் | 251 |
| ,, | M. M. KR. M. | 251 |
| ,, | மீனாட்சி கார்ப்பரேஷன் | 251 |
| ,, | ப. ராம. சுப. சுப்பிரமணியன் செட்டியார் | 251 |
| ,, | வெ. அ. அடைக்கப்ப செட்டியார் | 251 |
| ,, | சி. மு. அரு. நா. அருணாசலம் செட்டியார் | 251 |
| ,, | ஸ்ரீ கிருஷ்ணா அண் கோ | 251 |
| ,, | லெட்சுமி அண் கோ | 251 |
| ,, | திருச்சி மெட்டல் ஒர்க்ஸ் | 251 |

| | | ரூ. |
|---|---|---|
| திரு. | RM. சிவப்பிரகாசம் செட்டியார் | 251 |
| ,, | பெ. ஆத. ராம. ராமசாமி செட்டியார் | 251 |
| ,, | தெ. சி. நா. சுப. சி. சன்ஸ் | 251 |
| ,, | பி. கு. ரா. கும. பி. நாகப்ப செட்டியார் (ராமச்சந்திரபுரம்) | 251 |
| ,, | எஸ். சுந்தரம் செட்டியார் (உஷா) | 251 |
| ,, | மு. சி. மு. முத்துராமன் செட்டியார் | 251 |
| ,, | மு. சி. மு. சாமினுதன் செட்டியார் | |
| ,, | பி. கு. நா. வயிரவன் செட்டியார் (ராமச்சந்திரபுரம்) | 250 |
| ,, | தனலெட்சுமி பஸ் சர்வீஸ் (புதுக்கோட்டை) | 250 |
| ,, | சா. நா. அ. சொ. காரைக்குடி | 250 |
| ,, | வடு. சுப. சுப்பையா செட்டியார் | 250 |
| ,, | PR. நாகப்ப செட்டியார் (ராமச்சந்திரபுரம்) | 250 |
| ,, | பெரி. அரு. சொ. அண் கோ | 201 |
| ,, | கரு. மு. சித. அண் கோ | 201 |
| ,, | மு. ராம. முரு. ராமனுதன் செட்டியார் | 201 |
| ,, | பழநியப்பா பான் புரோக்கர்ஸ் | 201 |
| ,, | RM. M. முத்துக்கருப்பன் செட்டியார் | 201 |
| ,, | S. திருநாவுக்கரசு செட்டியார் | 201 |
| ,, | கைலாசா எலக்ட்டிரிகல்ஸ் | 201 |
| ,, | T. N. S. தேனப்ப செட்டியார் | 201 |
| ,, | நா. அழ. அழகப்ப செட்டியார் | 201 |
| ,, | S. பெரியண்ணன் செட்டியார் (எஸ். பி. இண்டஸ்ட்டிரீஸ்) | 201 |
| ,, | மு. நா. சுப. சுப்பிரமணியன் செட்டியார் (பெரம்பலூர்) | 201 |
| ,, | SP. முத்துராமன் செட்டியார் | 200 |
| ,, | அ. நா. சு. சுப்பிரமணியன் செட்டியார் | 200 |



# சங்கத்தின் வளர்ச்சிப் பணியில்

## எங்கள்

## முன்னுள்

**தலைவர்கள் :**

திரு. M. A. அருணுசலம் செட்டியார்
திரு. S. RM. CT. பழனியப்ப செட்டியார்
திரு. A. V. K. ஆவிச்சி செட்டியார்
திரு. AR. அண்ணுமலை செட்டியார்

**துணைத்தலைவர்கள் :**

திரு. M. RM. M. முத்துக்கருப்பன் செட்டியார்
திரு. M. A. அருணுசலம் செட்டியார்
திரு. A. V. K. ஆவிச்சி செட்டியார்
திரு. S. RM. S. சுப்பையா செட்டியார்
திரு. S. AR. பழனியப்ப செட்டியார்
திரு. A. சம்பந்தம் செட்டியார்

**செயலாளர்கள் :**

திரு. AV. K. சோமசுந்தரம் செட்டியார்
திரு. AV. K. ஆவிச்சி செட்டியார்
திரு. S. RM. S. சுப்பையா செட்டியார்
திரு. M. P. சொக்கலிங்கம் செட்டியார்
திரு. S. திருநாவுக்கரசு செட்டியார்
திரு. RM. முத்துவீரப்பன் செட்டியார்
திரு. M. செல்லப்பன் செட்டியார்
திரு. S. சண்முகம் செட்டியார்
திரு. RM. அழகப்பன் செட்டியார்
திரு. S. அண்ணுமலை செட்டியார்
திரு. S. சுந்தரம் செட்டியார்

**பொருளாளர்கள் :**

திரு. VE. A. வயிரவன் செட்டியார்
திரு. PS. PL. மெய்யப்பன்

# குலமும் கொடையும்

திலகவதி அண்ணமலை

நற்குடிப் பிறந்தார் கண்ணே நற் குணங்களனைத்தும் ஒன்றும். குண மறிந்து குலமறியலாம். புலிக்குட்டிக் குப் பாய்ச்சலும், மீன் குஞ்சிற்கு நீச் சலும் கற்பித்து வருவன அல்ல. அவை யன்ன குடிப்பிறந்தார்க்கு வழிவழி யாகவே தாமாகவே நற்குணங்கள் வந்தமையும். சேர்க்கையால் வறுமை யால் சிறிது மாறுபடலும் உண்டு.

குணங்களில் சிறந்தது கொடையே, தமிழ்மக்கள் இக்கொடையினை உயிரி னும் மேலாக உன்னினர். இல்வாழும் பெண்களும் தம் தலையாய கடமையாக வந்தவர்க்கீதலைப் போற்றினர். காவ லனும் ''இரவலர்க்கொன்றீயா வைகல் பலவாகுக'' என வஞ்சினங் கூறினன். காதலரும் ''இரப்போர்க்கீயா இன்மை யான் உறவே'' என வஞ்சினங் கூறி னர். இதனல் இல்வாழ்வின் பயன் கொடை, வீரத்தின் பயன் கொடை, காதலின் பயன் கொடை, எனவும் புகழினுக்கடிப்படை கொடையே என் பதுவும் தெற்றெனத் தெரிகின்றது. பிறப்பின் பயனே இசைபட வாழ்தல். அவ்விசை 'இரப்பார்க்கொன்றீவார் மேல் நிற்கும்' என்பது வள்ளுவர் கருத்து. புகழினுக்கு அடிப்படையாம் கொடை என்பது என்ன ?

தம் உடைமைகளைப் பிறர்க்கு அக மும் முகமும் மலர அளிப்பது. இக் கொடை இரப்பார், இன்னர், வறியார். இவர் மாட்டே நிகழும். அயோத்திமா நகரில் 'வண்மை இல்லையோர் வறுமை இன்மையால்' என்ருர் கம்பநாட்டாழ் வார். கேட்டும், கேளாமலும், குறிப் பறிந்தும், பயன்கருதியும், கருதாமலும் கொடுக்கப்படுவது கொடை. இல் லார்க்கு ஈதலே ஈகை என்பர் சான் ரேர். அதனினும் பயன் கருதாது ஈதலே மேன்மை என்பர் மேலோர். பொருளுள்ளளவும் கொடுப்பர் ஒரு சாரார். உயிருள்ளளவும் கொடுப்பர் ஒருவகையார். உயிரையும் கொடுப்பர் ஒரு திறத்தார். இறந்தும் கொடுப்பர் ஒரு புறத்தார். உடையார்க்கும் வலி யார்க்கும் கொடுத்தல் கொடையாகாது. இதுதான் கொடையின் இலக்கணம். இன்ரே வாழ வழிசெய்து கொடுத்தலே கொடையினும் மேன்மையாகக் கொள் ளப்படுகிறது.

இத்திறன் இந்தியநாட்டின் இயல் பானுலும் தமிழகத்தின் தனிச் சிறப்பு டைத்து. வள்ளல் பலரைத் தன்ன கத்தே தோற்றுவித்தது தமிழகம். வள்ளல்தம் முன்னணியில் நிற்போர் முடியுடை வேந்தரே. அவ் வள்ளல் களையும் பனுவல் வாயிலாவே அறி வோம். 'அன்னுரைக் கேட்டார் உண்டு. கண்டார் யார்? காவியங்கள் கூறும் வள்ளல்கள் வெறுங் கற்ப னையோ !' என்றையுறுங்கால் அழகப்பர் அவதரித்தார். வள்ளல் எனப்பெயர் பெற்ருர். வள்ளல்தம் இயல்பை வரை யறுத்துக் கூறினர். மன்னரல்லாது மற்றையோரும் வள்ளலாம் எனும் மாண்பினை உணர்த்தினர். 'குடிப்பிறந் தார் கண்ணே குணங்களமையும். நட் பும், தயையும், கொடையும், பிறவிக் குணம்' என்பதினையும் கூருமல் கூறிச்

சென்றார். இத்தகைய வள்ளல் தோன்றிய குலம் எத்தகையது ?

ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங்குடி. மானமிகு தருமத்தின் வழி நின்று, வாய்மையினில் ஊனமில்சீர்ப் பெருவணிகர் குடி-கற்புக்கரசி கண்ணகி, கறையில் காரைக்காலம்மை, இல்லையெனு இயற்பகை, பட்டினத்தார் இன்னாரன்ன பலரைப் பெற்றெடுத்ததுவும் இக்குடியே. செல்வம் என்பாள் செல்வமெனு சீர்மலி சமூகம். நெடுநில வரைப்பில் தென்புலத்தார், தெய்வம் விருந்து, ஒக்கல், தான் என்றைம்புலம் ஓம்பிய குலம். வன்சொல் களைந்து, இன்சொல் பூண்டு, பழியஞ்சி, அறத்தாற்றான் ஆக்கந்தேடி, பகுத்துண்டு கொடைமலி செல்வராய்த் திகழ்ந்த குலம். செறுக்கறுத்துக் காட்சிக்கெளியராய் மாட்சி நிறைந்தவராய் வாழ்ந்த இனம். மன்னர் பின்னோராய் வாழ்ந்தவரும் இவரே. இவையெலாம் பழம் பெருமைகளாகி விட்டன. ஏன் ?

கொடைமடம் பட்டதால் வந்த குடிகேடு. 'நன்றாற்றலுள்ளும் தவறுண்டு, அவரவர் பண்பறிந்தாற்றாக்கடை' என்ற தெய்வவாக்கையும் 'பாத்திரமறிந்து பிச்சையிடு' எனும் முதுமொழியையும் புறக்கணித்ததால் வந்த சீர்கேடு. இன ஒற்றுமைஇன்மையால் வந்த இழிகேடு. நகரத்தாரின் கொடையும் குணமும் ஏற்படுத்தும் அழுக்காறு ஒருபுறமிருக்க, கல்யாணச் சீர்வரிசைகளைப் பெருமை பிறங்கப் பேசித்திரிவதாலும், பழம் பெருமைகளைப் பிதற்றித் திரிவதாலும், உண்டாகும் பொருமையும் ஆற்றாமையும் சேர்ந்து நகரத்தார் என்றாலே வெறுத்து, ஒதுக்கி, இன்னார் உயர்வடையா வண்ணம், வழியடைக்குங் கல்லாகப் பலரை மாற்றிவிடுகின்றன. நகரத்தார் தம் குணங்கள் சிலவற்றை இன்னார்க்கே ஏவுகணைகளாக்கிக் காரியம் சாதித்து சமயம் பார்த்து, கரும்பு பிழிந்து சாறெடுத்து சக்கைதனை எறிவதைப் போல் படுகுழியில் அழுத்திவிடுகின்றனர். அத்தகைய சில குணங்கள் யாவை ?

அறத்திற்கஞ்சல், குலம் வேண்டி (தன்னினம் தவிர) யாவர்க்கும் பணிவு, இரக்க சிந்தனை, இகழாமை, ஈகை, நகை, வஞ்சப் புகழ்ச்சிக்கு மயங்கல், இனப்பகை, ஒற்றுமையின்மை ஆவன. இவர்கள் பழம் பெருந்நிலை அடைய வழி யாது ?

காக்கைகூட கரவாது தன்னினம் அழைத்து உண்பதைக் காண்கிறோம். அவ்வாறிருக்கத் தம்மினம் போற்றாதது என்னே ? சாதிமதம் பாரோம் என்றெண்ணும் தகைசான்ற பெரியீரும் 'எவ்வது உறைவது உலகம். அவ்வது உறைவது அறிவு' என்பதினையும், "உலகத்தோடொட்ட ஒழுகல் பல கற்றும் கல்லார் அறிவிலாதார்" என்பதினையும் உணர வேண்டும். தற்காலம் இத்தரணி தன்னினத்தார்க்கே தகைசான்றதனைத்தும் கரந்து செய்கின்றது.

குலப்பெருமை காக்க வேண்டின் தம்மின வறியார்க்கு வழங்கல் வேண்டும். வழங்காரெனின் அவ்வறியாரால் குலப்பெருமை சிறுகச் சிறுகக் குன்றும். பசி வந்திடப் பத்தும் பறந்துபோம். வறுமை கண்ணை மறைக்கக் கண்ணியம் இழப்பர். இரந்து நிற்பர். அந்நிலையினும் தக்கார் தக்கது செய்யாரெனின் அழுக்காறு, அவா, வெகுளி தோன்றும். கொலை, கொள்ளை மலியும். இட்டார் பெரியார், இடாதார் இழிகுலத்தார் என்றார் ஔவையார். உயர்குடி எனப் பெயர் வந்ததே பிறர்க்கு உதவி செய்தமையால்.

செல்வந்தர்கள் வானம் கரவாது வழங்குவதன்ன வழங்கவேண்டுமென்ப தில்லை. வாழ வழி வகுத்துக் கொடுத் தாலே போதும். உழைப்பைப் பெற்று ஊதியம் நல்கினுல் போதும். திருவீற் றிருந்த செட்டிநாடு ஒருவீற்றிருக்கும். "பற்றற்ற கண்ணும் பழமை பாராட்டு தல் சுற்றத்தார் கண்ணே உள" என் பதினை நினைவிருத்தல் வேண்டும். உயர்ந்தோர் தாழ்ந்தோர்க்குத் தங்கு தடையின்றி உதவி செய்யின் பொரு மைத் தீ அகலும். பொருமை அகலின் இனப்பகை ஒழியும். இனப்பகை இல்லையெனின் ஒற்றுமை உண்டாகும். ஒற்றுமை உண்டெனின் உயர்வடைய லாம்.

வெள்ளிவிழாக் காணும் திருச்சி நகரத் தார் சங்கம் விதை விதைத்தது. அது இன்று செடியாகி மரமாகி நிற்கின்றது. பூத்துக், காய்த்துப் பழுத்துப் பயன்தர வேண்டும். அதற்கு அனைவரும் ஊக் கம் தருவது மட்டும் பயன்தராது. ஒத் துழைப்பு நல்கி, செயல் வீரர்களாக வேண்டும். குலம் உயரக், கொடை மலிய அனைவரும் இறைவனை இறைஞ்சு வோமாக.



## சங்கத்தின் வளர்ச்சிக்கு வித்திட்டோர் :



முன்னுள் தலைவர்,
துணைத்தலைவர்
திரு. மு. அரு. அருணாசலம் செட்டியார்



முன்னுள் தலைவர்
திரு. S. RM. CT. PL.
பழனியப்ப செட்டியார்



முன்னுள் தலைவர்,
துணைத்தலைவர், செயலாளர்
திரு. A. V. K. ஆவிச்சி செட்டியார்



முன்னாள் தலைவர்
திரு. AR. அண்ணாமலை செட்டியார்



முன்னாள் துணைத்தலைவர்
திரு. M. RM. M.
முத்துக்கருப்பன் செட்டியார்



முன்னாள் துணைத்தலைவர்,
செயலாளர்
திரு. S. RM. S.
சுப்பையா செட்டியார்



முன்னாள் துணைத்தலைவர்
திரு. S. AR. பழனியப்ப
செட்டியார்



முன்னாள் துணைத்தலைவர்
திரு. A. சம்பந்தம்
செட்டியார்



முன்னாள் செயலாளர்
திரு. AV. K. சோமசுந்தரம் செட்டியார்

முன்னாள் செயலாளர்
திரு. M. P. சொக்கலிங்கம் செட்டியார்



முன்னாள் செயலாளர்
திரு. S. திருநாவுக்கரசு செட்டியார்



முன்னாள் செயலாளர்
திரு. RM. முத்துவீரப்ப செட்டியார்



முன்னாள் செயலாளர்
திரு. M. செல்லப்பன்



முன்னாள் செயலாளர்
திரு. S. சண்முகம் செட்டியார்



முன்னுள் செயலாளர்
திரு. RM. அழகப்ப செட்டியார்



முன்னுள் செயலாளர்
திரு. S. அண்ணுமலை செட்டியார்



முன்னுள் செயலாளர்
திரு. S. சுந்தரம் செட்டியார்



முன்னுள் பொருளாளர்
திரு. VE. A. வயிரவன் செட்டியார்



முன்னுள் பொருளாளர்
திரு. PS. PL. மெய்யப்பன்

# செயற்குழு உறுப்பினர்கள்



திரு. M. செல்லப்பன்



திரு. அழகு அழகப்பன்



திரு. V. R. கிருஷ்ணன்



திரு. V. N. V. நாகப்பசெட்டியார்



திரு. V. சிதம்பரம்



திரு. C. T. சபாரத்னம்



திரு. P. சிதம்பரம்



திரு. KR. கருப்பஞ் செட்டியார்



திரு. L. லெட்சுமணன்



திரு. O. PR. உடையப்ப செட்டியார்



திரு. SP. சண்முகம்



திரு. RM. அழகப்பன்



திரு. V. D. வயிரவன்



திரு. N. V. சோமசுந்தரம்



திரு. M. சந்திரசேகரன்



திரு. T. சுந்தரம் செட்டியார் அவர்களுக்கு வரவேற்பு



திரு. R. இராமநாதன் செட்டியார்
அவர்களுக்கு வரவேற்பு



திரு. R. இராமநாதன் செட்டியார்
அவர்களுடன்
முன்னாள் சங்கத் தலைவர்
காலஞ்சென்ற
S. RM. CT. PL. பழனியப்ப செட்டியார்



நாமக்கல் கவிஞர்
வெ. ராமலிங்கம் பிள்ளை
அவர்களுக்கு வரவேற்பு



திரு. A. M. M. முருகப்ப செட்டியார் அவர்களுக்கு வரவேற்பு.
படத்தில்
திரு. T. மாணிக்கவாசகம் செட்டியார், திரு. சுப. அருணுசலம் செட்டியார்
முதலானேருடன் சங்க நிர்வாகக் குழு அங்கத்தினர்கள்.







முன்னுள் ஷெரீப் திரு. M. A. M. ராமசாமி அவர்களுக்கு வரவேற்பு



சங்க விழாவில்
செட்டிநாட்டரசர்
ராஜா சர். மு. அ. முத்தையா செட்டியார்



முன்னாள் தலைவர்
முன்னாள் ஷெரீப்
திரு. மு. அ. மு. ராமசாமிக்கு
மாலை அணிவித்தல்

# கல்விப் பணியில் நாங்கள்

## கல்வி நிதி உதவி பெற்றவர்கள் விபரம் :—

| | பெயர் ஊர் | வருடம் | படிப்பு விபரம் | உதவிய தொகை |
|---|---|---|---|---|
| 1. | N. சின்னையா s/o MR. N. MR. முருகப்ப செட்டியார், நாகப்ப செட்டியார் தெரு, வலையப்பட்டி, திருச்சி ஜில்லா. | 1954 55 | B.E. | 400/- |
| 2. | K. குழந்தையன் s/o K. L. குமரப்ப செட்டியார், நச்சாந்துபட்டி, திருச்சி ஜில்லா. | 1954-55 | B. Sc. | 200/- |
| 3. | VE. சொக்கலிங்கம், அரிமழம். | 1954 55 | B. Sc. BT. | 300/- |
| 4. | A.L. சிதம்பரம் s/o CT. AL. அழகப்ப செட்டியார், ராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா. | 1954-56 | B.A. Hons. | 600/- |
| 5. | VR. சொக்கலிங்கம் s/o S.V. RM. வீரப்ப செட்டியார், புதுவயல், ராமனாதபுரம் ஜில்லா. | 1954-57 | Engineering | 300/- |
| 6. | A. சொர்ணலிங்கம் s/o K. M. A. அண்ணாமலை செட்டியார், தேவகோட்டை, ராமனாதபுரம் ஜில்லா. | 1954-58 | Engineering | 900/- |
| 7. | V. M. V. முத்து s/o V. M. வேலன் செட்டியார், ராயவரம், திருச்சி ஜில்லா | 1955-56 | Engineering | 400/- |
| 8. | S.M. அண்ணாமலை s/o N.K.M. சோமசுந்தரம் செட்டியார், காரைக்குடி, திருச்சி ஜில்லா. | 1955-56 | Engineering | 600/- |
| 9. | R. பழநியப்பன் s/o S.PL.RM. ராமசாமி செட்டியார், குழிபிரை, திருச்சி ஜில்லா. | 1955 57 | L.M.E. | 400/- |
| 10. | நாகப்ப அண்ணாமலை s/o ராம நாகப்ப செட்டியார், ஷண்முகநாதபுரம், ராமனாதபுரம் ஜில்லா. | 1955-59 | Engineering | 550/- |
| 11. | N. அடைக்கப்பன் s/o M.A.M. நாச்சியப்ப செட்டியார், குழிபிரை, திருச்சி ஜில்லா. | 1956-57 | Engineering | 300/- |
| 12. | S. சத்தியமூர்த்தி s/o PL. ஷண்முகம் செட்டியார், ராமச்சந்திரபுரம், திருச்சி ஜில்லா | 1956-57 | Tamil (Hons) | 250/- |
| 13. | M. தேனப்பன் c/o PL. சிதம்பரம், வ.உ.சி. ரோடு, கண்டனூர், ராமனாதபுரம் ஜில்லா. | 1956 57 | B.E.(Chem) | 350/- |
| 14. | PL. வள்ளியப்பன் s/o AP. AR. பழநியப்ப செட்டியார், கோனாபட்டு, திருச்சி ஜில்லா. | 1956–57 | II BE. | 350/- |

| பெயர் ஊர் | வருடம் | படிப்பு விவரம் | உதவிய தொகை |
|---|---|---|---|
| 15. C. M. மெய்யப்பன் s/o C. மெய்யப்ப செட்டியார், காரைக்குடி, ராமனுதபுரம், ஜில்லா. | 1956-57 | B. Com. | 250/- |
| 16. N. சுப்ரமணியன், s/o நாராயணன் செட்டியார், கல்லல், ராமனுதபுரம் ஜில்லா. | 1957-58 | S.S.L.C. | 300/- |
| 17. S. S. லக்ஷ்மணன் s/o A. SS. S. சோலையப்ப செட்டியார், பள்ளத்தூர், ராமனுதபுரம் ஜில்லா. | 1958-60 | B.E. | 1000/- |
| 18. M. செல்லப்பன், s/o முத்தைய செட்டியார், கண்டவராயன்பட்டி, ராமனுதபுரம் ஜில்லா. | 1959 60 | M.B.B.S. G.C.I.M. | 350/- |
| 19. N. ஸ்ரீநிவாசன் s/o KR. A முத்து நடராஜன் செட்டியார், A தெக்கூர், ராமனுதபுரம் ஜில்லா. | 1959-60 | Economics | 350/- |
| 20. SP. ராமசாமி s/o சுப்ரமணியன் செட்டியார், வீரமதி, கீழச்சாவல்பட்டி P.O. ரரமனுதபுரம் ஜில்லா. | 1959 61 | B. Sc. | 450/- |
| 21. L. மீனுக்ஷிசுந்தரம் s/o N. N. சாத்தப்ப, கல்லல், ராமனுதபுரம் ஜில்லா. | 1960 61 | Engineering | 1200/- |
| 22. AN. மணி s/o KR. A. அண்ணுமலை செட்டியார், ஆவிணிபட்டி, ராமனுதபுரம் ஜில்லா. | 1960 61 | Pulavar | 200/- |
| 23. M. பெரியண்ணன், s/o N. A. PR. முத்தைய செட்டியார், கண்டனூர், ராமனுதபுரம் ஜில்லா. | 1960-61 | Polytechnic | 450/- |
| 24. SP. மீனுக்ஷிசுந்தரம் s/o S. P. RM. சுப்ரமணியன் செட்டியார், மாங்குடியார் இல்லம், INA சந்து, தேவகோட்டை, ராமனுதபுரம் ஜில்லா. | 1961-62 | B. Sc. | 350/- |
| 25. K. L. முத்து s/o S. K. L. குழந்தையன் செட்டியார், ராயவரம், திருச்சி ஜில்லா. | 1961-62 | III B. Sc. | 270/- |
| 26. PR. கதிரேசன் s/o பெரியண்ணன் செட்டியார், வலையபட்டி, திருச்சி ஜில்லா. | 1961-62 | M. Sc. | 450/- |
| 27. S. நாகப்பன் s/o S.N. AR. சேதுராமன் செட்டியார், நடராஜபுரம், ராமனுதபுரம் ஜில்லா. | 1961-62 | B. Sc. | 250/- |
| 28. S. ராமநாதன், S.N. RMS இல்லம், புதுமனை தெரு, அரிமழம் P. O. | 1961-62 | Polytechnic | 230/- |
| 29. A. M. வீரப்பன் s/o A. M. முத்தைய செட்டியார், கண்டரமாணிக்கம், ராமநாதபுரம் ஜில்லா. | 1961 64 | L. C. E. | 250/- |
| 30. A. L. சுப்பையா s/o SP. அழகப்ப செட்டியார், 6. சிறுவயல், ராமநாதபுரம் ஜில்லா. | 1961-66 | Engineering | 250/- |
| 31. M. ஆவிச்சி, s/o A.V.M.M. மெய்யப்ப செட்டியார், கண்டரமாணிக்கம், ராமனுதபுரம் ஜில்லா. | 1968-69 | (M. A. Litt) | 400/- |

| | பெயர் ஊர் | வருடம் | படிப்பு விபரம் | உதவிய தொகை |
|---|---|---|---|---|
| 32. | K. R. மெய்யப்பன் s/o கருப்பையா செட்டியார், சொக்கநாதபுரம், ராமனுதபுரம் ஜில்லா. | 1970 71 | B. A. (Eco) | 270/- |
| 33. | S. M. சொக்கலிங்கம் s/o V. சோமசுந்தரம் செட்டியார், கல்லல், ராமனுதபுரம் ஜில்லா. | 1971-72 | B. Com II year | 240/- |
| 34. | R.M.S. விசாலாக்ஷி ஆச்சி w/o R.M. சுப்பிரமணியன் செட்டியார், B. C. பிளாக், நமனசமுத்திரம், திருச்சி ஜில்லா. | 1972-73 | குழந்தைகள் கல்விக்காக | 50/- |
| 35. | M. உலகப்பன் s/o UL. மெய்யப்ப செட்டியார், CT. PR. பாங்க் 33, மாசிம்பேட்டை தெரு, திருச்சி. | 1972 73 | P.U.C. | 150/- |
| 36. | AR. லெக்ஷ்மணன் s/o அருணாசலம் செட்டியார், வாணிய தெரு, உறையூர், திருச்சி. | 1972-73 | P.U.C. | 150/- |
| 37. | AN. சுப்பிரமணியன் s/o SP. அண்ணாமலை செட்டியார், பழனியப்பா அண் கோ. 63, சப்ஜெயில் ரோடு, திருச்சி. | 1972-73 | P.U.C. | 150/- |
| 38. | S. வள்ளியப்பன் s/o C.T. சிங்காரம் செட்டியார், மிதிலைப்பட்டி. | 1972 73 | P.U.C. | 100/- |
| 39. | V. F. சோமசுந்தரம் s/o VD. வயிரவன் செட்டியார், வடக்கு முதல் தெரு, கல்லல், ராமனுதபுரம் ஜில்லா. | 1972-73 | L.E.E. | 100/- |
| 40. | N. நாச்சியப்பன் s/o P. N. நாராயணன் செட்டியார், சண்டரமாணிக்கம், ராமனுதபுரம் ஜில்லா. | 1972-73 | P.U.C. | 150/- |
| 41. | M. சிட்டாள் d/o M.T.T. முத்தைய செட்டியார், காக்கா தோப்பு தெரு, மதுரை. | 1972-73 | B.Sc. | 500/- |
| 42. | KR. மெய்யப்பன், நாசரேத், திருநெல்வேலி ஜில்லா. | 1972-73 | B.A. | 270/- |
| 43. | M. உலகப்பன் s/o O.L. மெய்யப்ப செட்டியார், 121, பெருமாள் செட்டியார் தெரு, முத்துப் பட்டணம், காரைக்குடி. | 1973-74 | B.Sc. | 250/- |
| 44. | N. நாச்சியப்பன் s/o P. N. நாராயணன் செட்டியார், கண்டரமாணிக்கம், ராமனுதபுரம் ஜில்லா. | 1973 74 | B.Sc. Ag. | 500/- |
| 45. | NK. அழகப்பன் s/o C. நாகப்ப செட்டியார், 42, தொண்டியர் தெரு, தேவகோட்டை, ராமனுதபுரம் ஜில்லா. | 1973-74 | P.U.C. | 150/- |
| 46. | SP. கஸ்தூரி, 3, K. VR. தெரு, தேவகோட்டை, ராமனுதபுரம் ஜில்லா. | 1973-74 | P.U.C. | 150/- |
| 47. | S. விசாலாக்ஷி, லெக்ஷ்மிபுரம், கிழத்தெரு, தேவகோட்டை. | 1973-74 | டைப் ரைட்டிங் | 100/- |

1973-74ம் ஆண்டில் பள்ளியில் படிக்கும் கீழ்க்கண்ட மாணவ மாணவியர் புத்தகம் வாங்குவதற்கு நிதி உதவி பெற்றனர்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | A. N. அண்ணாமலை | E.R. உயர்நிலைப்பள்ளி, திருச்சி. | S.S.L.C. | 50/- |
| 2. | R. மெய்யப்பன் | T.E.L.C. உயர்நிலைப்பள்ளி, திருச்சி. | 7-ம் வகுப்பு | 20/- |
| 3. | V. கருப்பையா | பிஷப் ஹீபர் உயர்நிலைப்பள்ளி, திருச்சி. | S.S.L.C. | 50/- |
| 4. | PL. அடைக்கம்மை | R.C. உயர்நிலைப்பள்ளி, நச்சாந்துபட்டி. | 7-ம் வகுப்பு | 20/- |
| 5. | M. உமா | A.C. உயர்நிலைப்பள்ளி, பள்ளத்தூர். | S.S.L.C. | 50/- |
| 6. | M. சிதம்பரம் | முனிசிபல் உயர்நிலைப்பள்ளி. திருவண்ணாமலை. | S.S.L.C. | 71/- |
| 7. | S. நாச்சம்மை | புனித ஜூலியானா மிடில் ஸ்கூல், திருச்சி. | 7-ம் வகுப்பு | 20/- |
| 8. | PR. நாகரெத்தினம் | சின்னராணி ஹைஸ்கூல் பூண்டி. | 7-ம் வகுப்பு | 20/- |
| 9. | T. பெரிய கருப்பன் | விவேகாநந்தர் எய்டட் ஸ்கூல், ஆவினிப்பட்டி. | 7-ம் வகுப்பு | 20/- |
| 10. | S.V. வெங்கடாஜலம் | திருநாவுக்கரசு வித்தியாசாலை, நேமத்தான்பட்டி. | 6-ம் வகுப்பு | 20/- |
| 11. | கிருஷ்ணன் | இந்து உயர்நிலைப்பள்ளி, சென்னை. | 10-ம் வகுப்பு | 20/- |
| 12. | முத்துவீரப்பன் | ஸ்ரீரங்கம் உயர்நிலைப்பள்ளி, திருச்சி. | 9-ம் வகுப்பு | 20/- |

# இன்பம் எது?

கல்கண்டு ஆசிரியர் : தமிழ்வாணன்.

இன்பத்தில் இரண்டுவகைகள் இருக்கின்றன. ஒன்று, நம்முடைய மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்களின் வாயிலாக அடையப்படுகிற இன்பம்.

மற்ருென்று, இந்த ஐம்புலன்களின் தயவு இல்லாமலே நாம் எப்போதும் அனுபவிக்கக் கூடிய ஓர் ஆனந்தம்.

ஐம்புலன்களின் வாயிலாக நாம் இன்பம் அனுபவிக்க முற்படும்போது நமக்குப் பிரியமான சில உலகியல் பொருள்கள் இன்றியமையாதவையாய் ஆகிவிடுகின்றன. எடுத்துக்காட்டாக, நமக்குப் பிரியமான உணவு கிடைத்தால்தான், வாயினுல் பெறப்படுகிற இன்பத்தை நாம் பெறமுடியும். பிரியம் இல்லாத பொருட்களே நாம் சுவைக்குமாறு கட்டாயப்படுத்தப்பட்டால், நமக்குத் துன்பம்தான் ஏற்படுகிறது.

இதேபோல் நமக்குப் பிரியமான காட்சிகளேக் கண்டால் இன்பம். பிரியமில்லாத காட்சிகளேக் கண்டால் துன்பம். பிரியமான நறுமணத்தை முகர்ந்தால் இன்பம். பிரியமில்லாத தீய மணத்தை முகர்ந்தால் துன்பம். பிரியமான சங்கீதத்தைக் கேட்டால் இன்பம். சண்டை இரைச்சலேக் கேட்டால் துன்பம். மெத்தென்ற பஞ்சணேயில் படுத்தால் இன்பம். கரடுமுரடான பாருங் கல்லில் படுத்தால் துன்பம்.

எனவே, ஐம்புலன்களின் வாயிலாக அனுபவிக்கப்படுகிற இன்பங்கள் அனைத்தும் நம் உள்ளத்தின் விருப்பு வெறுப்புக்களேச் சார்ந்தவையாகவே இருக்கின்றன. அதே சமயத்தில் முற்றிலும் வெளியுலகத்திலிருந்தே கிடைக்க வேண்டியவையாகவும் இருக்கின்றன.

உள்ளத்தின் விருப்பு வெறுப்புக்கள் எல்லாரிடத்திலும் ஒரே மாதிரியாக அமைந்திருப்பது இல்லே. நாவினுல் நுகரப்படுகிற சுவைகளிலே சிலருக்குக் காரம் பிடிக்கும். அதே காரம் வேறு சிலருக்கு வெறுப்பாக இருக்கும். கண்ணுல் காண்கின்ற வண்ணங்களிலே, சிலருக்கு நீலம் பிடிக்கும். வேறு சிலருக்குச் சிவப்புத்தான் பிடிக்கும். மூக்கால் நுகரப்படுகிற மணங்களிலே சிலருக்கு மீன் வாடை இனிமையாக இருக்கும். வேறு சிலருக்கு அது குடலேப் புரட்டும். செவியால் அனுபவிக்கப் படுகிற ஓசைகளிலே சிலருக்குக் குழலின் நாதம் குளிர்ச்சியாக இருக்கும். வேறு சிலருக்குத் தாரை தப்பட்டைகளின் ஓசைதான் இன்பம் அளிப்பதாய் இருக்கும். மெய்யினுல் அறியப்படுகிற உணர்ச்சிகளிலே சிலருக்கு வெந்நீர் பிடிக்கும். வேறு சிலருக்கு அதே வெந்நீர் வெறுப்பாக இருக்கும். குளிர்ந்த நீர் விருப்பமாக இருக்கும்.

எனவே, நம் உள்ளத்தின் விருப்புக்களே உலகியல் பொருள்களில் நமக்கு இன்பத்தையும் உண்டுபண்ணுகின்றன. அந்த இன்ப துன்பங்கள் இரண்டுமே நமது ஐம்புலன்களின் வாயிலாகத்தான் அனுபவிக்கப்படுகின்றன.

அந்த ஐம்புலன்களின் வாயிலாக அறியப்படுகிற உலகியல் பொருள்களை மட்டுமே நம் இன்ப வாழ்வுக்கு நாம் நம்பியிருப்போமானல் இன்ப துன்பம் ஆகிய இரண்டையும் கலந்தேதான் நாம் அனுபவிக்க வேண்டியது இருக்கும். துன்பக் கலப்பற்ற இன்பம் என்பது அவற்றின் மூலம் நமக்குக் கிடைக்கவே கிடைக்காது.

இந்த நியதியை நாம் ஒப்புக் கொள்வதில்லை. ஐம்புலன்களையும் துணையாகக் கொண்டே, நாம் துன்பக் கலப்பற்ற இன்பவாழ்வு வாழ்வதற்கு ஆசைப்படுகிறோம். அதற்காக நமக்கு வெறுப்பைத் தருகிற பொருள்களிலிருந்தும் நிகழ்ச்சிகளிலிருந்தும் விலகி ஓடுகிறோம். நமக்கு விருப்பமான பொருள்களையும் நிகழ்ச்சிகளையும் ஆவலோடு நாடிச் செல்கிறோம்.

குழந்தைப் பருவத்திலிருந்து இறுதிப் பருவம் வரையில் இவ்வாறு விலகி ஓடுவதும் நாடிச் செல்வதும்தான் நம் வாழ்க்கையின் இடையருத நடைமுறையாக இருந்து வருகிறது. இந்த மாதிரி வாழ்க்கையில் அமைதி கிடையாது. அமைதியற்ற நிலையில் நாம் அவ்வப்போது அனுபவிக்கிற இன்பங்களும் உண்மையான இன்பங்கள் ஆக மாட்டா.

உள்ளத்தில் அமைதி இல்லாமல் நாம் ஆயிரம் இன்பங்களை அனுபவித்தாலும் அந்த இன்பங்கள் அனைத்தும் வேப்பெண்ணெயில் கரைக்கப்பட்ட வெல்லத்தைப் போன்றவையே தவிர வேறு அல்ல. அமைதியான உள்ளத்தினுல் அனுபவிக்கப்படுகிற இன்பங்கள் பாலிலே கரைக்கப்பட்ட வெல்லத்தைப் போன்றவை. பால் எப்படி இயல்பாகவே இனிப்பு உடையதாய் இருக்கிறதோ அப்படியே அமைதியான உள்ளமும் இயல்பாகவே இன்பம் அமைந்ததாய் இருக்கிறது. அந்த இன்பம்தான் ஐம்புலன்களின் தயவு இல்லாமல் நாம் எப்போதும் அனுபவிக் கூடிய ஓர் இன்பம்!



# நீடு வாழ்க!

கண்ணதாசன்

காசியிலிருந்து தெற்கு(க்)
கன்னியா குமரி மட்டும்
தேசியப் பணிகள், கோவில்
திருப்பணி புரிந்தோம்; இந்த
ஆசியக் கண்டத்துள்ள
அத்தனை நாடும் எங்கள்
மாசறு பணியைப் பெற்று
வளர்ந்ததை உலகங் காணும்

நகரத்தார் மக்கள் இந்த
நாட்டினுக் குதவி செய்தும்
நகரத்தார் மக்கட் காக
நற்றுணை புரிந்த தில்லை
பகரொணுத் துயரம் கொண்ட
பாவையர் வாழ்க்கை காண
சிகரம்போல் அமைப்பைச் சோழன்
திருச்சியில் நண்பர் கண்டார்

அவர்பெயர் 'ஸ்டார்' என்பார்கள்
அருணசலம் என்பார்கள்
நவமணிக் குணங்கள் பெற்ற
நல்லவர் தகையோர்; அந்தத்
தவமகன் நகரத்தார்க்குத்
தலைவராய் நின்று செய்யும்
அவைபெரிதாகும்; வாழ்க
அன்பரும் நண்பர் தாமும்!



# அன்பே சிவம்

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்**

*(மூலம் : கல்கி தீபாவளி மலர் 1972)*

"துர்வாஸர் மாதிரி" என்றே சொல்லி ஜனங்கள் பயப்பட்டுக்கொண்டிருந்த ஸ்வாமிகள் ஒருவர் சமீப காலத்தில் இருந்தார். சுமார் அறுபது எழுபது வருஷங்களுக்கு முன்னால் அவர் செட்டி நாட்டில் கோயிலூரில் வசித்து வந்தார். அவருக்கு வீரப்ப ஸ்வாமிகள் என்று பெயர். அவர் மிகவும் பெரியவர். பரமசிவனின் பரம பக்தர். மகா சுத்தமான வாழ்க்கை நடத்தியவர். இத்தனை நல்ல அம்சங்கள் இருந்தாலும் ரொம்பவும் முன்கோபியாக இருந்தார். சட்டென்று கோபம் வந்துவிடும். "பிடி சாபம்" என்று திட்டிவிடுவார். அவர் சபித்தபடியே நடந்துவிடும். அதனால் அவரிடம் எல்லோருக்கும் மிகவும் பயம். நாட்டுக்கோட்டைச் செட்டிமார்களுக்கு அவரிடம் ஏக பயபக்தி. பக்தியைவிட பயம் அதிகம் என்றும் சொல்லலாம். அவர் எது சொன்னாலும் மரியாதை காரணமாகப் பாதியும், பயம் காரணமாகப் பாதியுமாக, அவர் சொன்னபடியே செய்துவிடுவார்கள்.

ஆசை தடுக்கப்பட்டால் கோபமாகிறது என்றேன். வீரப்ப ஸ்வாமிகளுக்கு என்ன ஆசை இருந்தது? அவருக்கு உத்தமமான ஆசையே இருந்தது. தமிழ் நாட்டில் உள்ள தேவாலயங்கள் எல்லாம் பூர்வத்தில் இருந்ததுபோல் சீரும் சிறப்புமாக இருக்க வேண்டும்; இந்த நாடு முழுவதிலும் வேத வித்யை மங்காமல் பிரகாசிக்க வேண்டும் என்பதே அவரது ஆசை. ஆனபடியால் நகரத்தாரிடம், "இன்ன கோயிலுக்குத் திருப்பணி செய்யுங்கள்; இன்ன ஊரில் வேத பாடசாலை வையுங்கள்" என்று கட்டளை போடுவார். அவரிடம் அடங்கி நடந்துகொண்டிருந்த நகரத்தார் சமூகத்தினர் அவர் சொன்னவிதமே ஏராளமான ஆலயங்களுக்குத் திருப்பணி செய்தார்கள். வேத பாடசாலைகளை எங்கு பார்த்தாலும் வளர்த்தார்கள். க்ஷேத்திரங்களில் எல்லாம் தர்ம சத்திரங்களைக் கட்டிவைத்தார்கள்.

வீரப்ப ஸ்வாமிகளின் கோபத்தினால் நல்ல விளைவே உண்டாயிற்று. நாரதர் கலகம் செய்தாலும் நல்லதில் முடியும் என்கிற மாதிரி, வீரப்ப ஸ்வாமிகள் கோபித்துக் கொண்டதால் நாட்டுக்கே பெரிய நன்மை உண்டாயிற்று.

(வீரப்ப ஸ்வாமிகளிடம் இருந்த பயத்தால்தான் நகரத்தார் இந்தத் தெய்விகத் தொண்டும், வைதிகத் தொண்டும் செய்தார்கள் என்று நான் சொல்வதாக அர்த்தம் இல்லை. அவர்களுக்கு இயற்கையாகவே நம் மதத்தில் நல்ல அபிமானமும், தாராள மனமும் உண்டு. பழைய ராஜாக்கள் மறைந்து வெள்ளைக்கார ஆட்சி ஏற்பட்ட பிறகு, பழைய ராஜாக்கள் செய்துவந்த வேத போஷணையையும், கோயில் திருப்பணியையும் நடத்திக் கொடுத்தவர்கள் நாட்டுக்கோட்டைச் செட்டிமார்தான். இந்தப் பணியில் அவர்களுக்குத் தூண்டுகோலாக இருந்தவர்கள் சுந்தர

ஸ்வாமிகள் என்கிற மகானும், கோயிலூர் வீரப்பஸ்வாமிகளுமே ஆவார்கள்.)

இத்தனை நல்ல காரியங்களுக்குக் காரணமாக இருந்த வீரப்ப ஸ்வாமிகளுக்கு மட்டும் மனசில் நிறைவு இல்லை. தமது முன்கோப குணத்தை அவரே உணரலானார். "எத்தனை செய்தால்தான் என்ன? இந்தக் கோபம் என்னைவிட்டுத் தொலையவில்லையே! எப்போது கோபத்தை ஒழித்துவிட்டுச் சாந்தமாக, சௌக்யமாக இருக்கப் போகிறேன்?" என்று ஏங்கலானார்.

வீரப்ப ஸ்வாமிகளுக்கு யாரிடமும் ஆழ்ந்த துவேஷமோ, வெறுப்போ கிடையாது. ஆனாலும் முன் கோபத்தில் ஆத்திரமாகப் பேசிவிடுவார். அன்பே சிவம் என்ற சித்தாந்தத்தில் அவருக்கு நல்ல நம்பிக்கை இருந்தும், கோயில் திருப்பணிகள் மூலம் நிறைய சிவ புண்ணியம் செய்திருந்தபோதிலும் தமக்குப் பூரணமான அன்பு சித்திக்கவில்லையே என்று அவர் ஹிருதயபூர்வமாகப் பச்சாத்தாபப்பட்டார்.

கோபம் பெரிய பாபம் என்று அவருக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. கோபத்துக்கு இடம் தரக்கூடாது என்றும் மனப்பூர்வமாகத் தாபப்பட்டார். ஆனாலும்கூடப் பூர்வ வாசனையாக அந்தக் குணம் அவருக்குள் தடிப்பேறிவிட்டதால், திடீர் திடீரென்று கோபம் பொத்துக்கொண்டு வந்துவிடும். அப்புறம் அவரே பச்சாத்தாபம் கொள்வார்.

'இந்தத் தனவணிகர்களை எல்லாம் நான் அடக்கி வைக்கலாம்; ஆனால் உள் பகையாக இருக்கிற இந்தக் கோபத்தை அடக்காத வரையில் என்ன பிரயோஜனம்?' என்று ஒரே விசனமாக இருந்தார்.

வீரப்ப ஸ்வாமிகளுக்கு ஒரு பிராமண சகா இருந்தார். அவர் பெயர் சுப்பராய அய்யர். இவர் ஸ்வாமிகளுக்குப் புராணங்கள், நீதி சாஸ்திரங்கள் முதலியவற்றைப் படித்து விளக்குவது வழக்கம்.

"எத்தனையோ புராணங்களைப் பார்த்திருக்கிறீர்களே! கோபம் அடியோடு அடங்குவதற்கு வழி அதில் எதிலாவது சொல்லியிருக்கிறதா? இவ்விஷயத்தைக் கவனித்துப் பார்த்துச் சொல்லுங்கள்" என்று சுப்பராய அய்யரிடம் சொன்னார் வீரப்ப ஸ்வாமிகள்.

சுப்பராய அய்யர் பதினெட்டுப் புராணங்கள் மட்டுமின்றி ஸ்தல புராணங்களிலும் நல்ல பரிசயம் உள்ளவர்.

ஒவ்வொரு கோயிலுக்கும் உள்ள மாகாத்மியத்தைச் சொல்லுவதே ஸ்தல புராணம். தற்காலத்தில் இவற்றை ஆஸ்திகர்கள்கூடப் பெரிதாக நினைப்பதில்லை. அந்தந்த ஊராரும் தங்கள் கோயிலைப்பற்றி அதிசயோக்தியாக, மிகைப்படுத்தி எழுதி வைத்த கட்டுக் கதைதான் ஸ்தல புராணம் என்று நினைக்கிறார்கள். இது சரியல்ல. பல ஸ்தல புராணங்களை ஒன்றாகச் சேர்த்துப் பார்க்கும்பொழுது ஒவ்வொரு விருத்தாந்தத்துக்குமிடையே சம்பந்தம் தெரியும். ஒரு ஸ்தல புராணத்தில் சொல்லியிருப்பதை இன்னொரு ஸ்தல புராணம் உறுதிப்படுத்தும். மகாபுராணங்களில் சுருக்கமாகச் சொல்லியிருக்கிற ஒரு விஷயத்தை ஸ்தல புராணம் விளக்கம் தந்து தெளிவுபடுத்துவதையும் பார்க்கலாம். எண்ணற்ற மகான்கள், ஸ்தலந்தோறும் தபஸ் இருந்து பக்தி பண்ணினார்கள். அவர்களுக்காக அங்கங்கும் ஈசுவரன் வந்து லீலை செய்தான். இந்த மனோபாவத்தோடு ஸ்தல புராணங்களை அணுக வேண்டும். முன் நாட்களில் தமிழில்

தேர்ந்த மகாவித்வான்களான கச்சியப்ப சிவாசாரியார், மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை போன்றவர்களும் ஸ்தல புராணம் எழுதுவதை ஒரு முக்கியமான காரியமாக வைத்துக் கொண்டிருந்தார்கள். தங்கள் திறமையை விசேஷமாகக் காட்டும் இலக்கியமாக (Original work ஆக) இல்லாவிட்டாலும்கூட, ஸம்ஸ்கிருதத்திலுள்ள ஸ்தல புராணங்களைத் தமிழில் மொழி பெயர்த்தார்கள்.

வீரப்ப ஸ்வாமிகளைவிட்ட இடத்துக்கு வருகிறேன்: அவர் தம் கோபம் அடங்க எந்தப் புராணத்திலாவது ஏதாவது வழி சொல்லியிருக்கிறதா என்று சுப்பராய அய்யரிடம் கேட்டார்.

அதிர்ஷ்ட வசமாக சுப்பராய அய்யருக்கு வழி தெரிந்திருந்தது! திருக்களர் ஸ்தல புராணத்திலிருந்து அந்த வழி தெரிந்திருந்தது.

திருக்களர் என்பது தஞ்சாவூர் ஜில்லாவில் திருத்துறைப் பூண்டிக்கு அருகிலே இருக்கிற க்ஷேத்திரம்.

சுப்பராய அய்யர் வீரப்ப ஸ்வாமிகளிடம் சொன்னுர்: "பூர்வத்தில் துர்வாஸருக்குத் தமது கோப குணத்தைப் போக்கிக் கொள்ளவேண்டும் என்று ரொம்பவும் தாபம் ஏற்பட்டதாம். அப்போது அவர் திருக்களர் க்ஷேத்திரத்தில் பரமேசுவரனை ஆராதித்தார். ஈசுவரனும் கடைசியில் கருணை கொண்டு துர்வாஸருடைய பூர்வ வாசனையைப் பூரணமாக ஒழித்து, அவரைப் பரம சாந்தராக ஆக்கினுர். இப்போதுகூடத் திருக்களர் கோயிலில் நடராஜ சந்நிதியில் துர்வாஸர், கொஞ்சம் கூடக் கோபமே இல்லாமல் சாந்தமாக ஆனந்தமாகச் சிரித்துக்கொண்டு விக்கிரக வடிவத்தில் இருக்கிருர்."

அந்த வரலாற்றைக்கேட்டதும் வீரப்ப ஸ்வாமிகளுக்கு ஒரு புதிய உற்சாகம் பிறந்தது. தம் கோபத்துக்குக் கதி மோக்ஷம் உண்டா என்று ஏங்கி ஏங்கிக் கிலேசப்பட்டுக்கொண்டிருந்தவருக்குப் புதிய தெம்பு பிறந்தது.

நேரே திருக்களர் க்ஷேத்திரத்துக்குச் சென்ருர் வீரப்ப ஸ்வாமிகள்.

அப்போது ஈசுவரன் கோயில் ரொம்பவும் பழுதாக இருந்தது. அதனுல் என்ன? இவர் கோபத்துக்குப் பயந்துதான் எத்தனையோ கோயில்கள் திருப்பணி கண்டிருக்கின்றனவே! கோபத்தைத் தொலைக்க வந்த இடத்திலும் திருப்பணி நடக்க உத்தரவிட்டார் வீரப்ப ஸ்வாமிகள்.

இன்னமும் அவர் கோபிப்பார் என்ற பயபக்தி ஜனங்களுக்கு இருந்ததோ என்னவோ? சீக்கிரத்திலேயே திருக்களர் ஆலயத்துக்குத் திருப்பணி விமரிசையாக நடந்தேறியது. திருக்குளமும் பழுது பார்க்கப்பட்டது. கோயிலைச் சுற்றி வீடுகள் கிளம்பின.

ஸ்வாமிகள் வடக்கு மாட வீதியில் ஒரு குடிசையில் வாசம்செய்து வந்தார். கோபம் தீர்ந்த துர்வாஸ தரிசனமும், கோபம் தீர்த்த ஈசுவர தரிசனமும் செய்து வந்தார். தம்மிடத்தில் ஒரு தோஷம் இருக்கிறது என்று ஹிருதய பூர்வமாக வருந்தி, அது நீங்குவதற்காக ஈசுவராநுக்கிரகத்தை யாசித்தபடி இருந்தார். இப்படிப்பட்ட உத்தமமான பிரார்த்தனை பலிக்காமல் போகுமா?

ஆதி காலத்தில் துர்வாஸரின் கோபம் சமனமான அதே ஸ்தலத்தில் சமீப காலத்தில் வாழ்ந்த வீரப்ப ஸ்வாமிகளின் கோபமும் குறையத் தொடங்

கியது. துர்வாஸர் என்று மகாகோபக்காரராக ஒரு ரிஷி இருந்தாரா, அவர் திருக்களர் க்ஷேத்திரத்துக்கு வந்தாரா, அங்கே அவரது கோபம் அடங்கிற்று என்று சந்தேகப்படுபவர்கள் இருக்கலாம். ஆனால் சமீப காலத்தில் மகா கோபிஷ்டராக இருந்த வீரப்பஸ்வாமிகள் இந்த க்ஷேத்திரத்துக்கு வந்து தமது கோபத்தைத் தொலைத்தது பலருக்குத் தெரிந்த விஷயம்.

தாம் அநுக்கிரகம் பெற்ற திருக்களர் க்ஷேத்திரத்தில் தேர் இல்லாத குறையைப் பூர்த்தி செய்தார் வீரப்ப ஸ்வாமிகள். அழகான ரதம் நிர்மாணமாயிற்று.

முதன்முதலாக ஸ்வாமியை வைத்துத் தேரை இழுக்கிற உற்சவத்துக்கு ஏற்பாடாயிற்று. தேரை நிர்மாணித்த மரத் தச்சர்கள் அதை இழுக்குமுன் ஓர் ஆட்டைப் பலிதரவேண்டும் என்று சொன்னார்கள்.

வீரப்ப ஸ்வாமிகள் அதை ஆமோதிக்கவில்லை. கோபம் எல்லாம் போய் ஒரே அஹிம்ஸா மயமாகிவிட்ட அவருக்கு மிருக பலியில் துளிக்கூட விருப்பமில்லை.

"ஆடு பலிதராவிட்டாலும், குறைந்தபட்சம் ஒரு கோழியையாவது பலி தரத்தான் வேண்டும். அப்போதுதான் தேர் இடத்தை விட்டே கிளம்பும், நிர்விக்கினமாக ஓடி நிலைக்குத் திரும்பும். இல்லாவிட்டால் ஏதாவது விபத்து வரும். இதுதான் ஆயிரம்கால வழக்கம். ஸ்வாமிகள் இதை ஆட்சேபிக்கக் கூடாது" என்று மற்றவர்கள் சொன்னார்கள்.

ஸ்வாமிகளோ பிடிவாதமாக, "நீங்கள் நான் சொல்லுகிறபடியே தேரை இழுத்துப் பாருங்கள். விக்கினம் வந்தால் அப்புறம் அதற்கு நிவிருத்தி செய்து கொள்ளலாம்" என்று சொல்லி விட்டார்.

குறிப்பிட்டிருந்த சுபதினத்தில் தேர் இழுக்கப்பட்டது. தேரை அழகாக அலங்கரித்து, உள்ளே ஸ்வாமியை அலங்கரித்து வைத்திருந்தார்கள். கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது. ஊர் ஜனங்கள் எல்லோரும் பெரியவர், சின்னவர், பணக்காரர், ஏழை, பண்டிதன் பாமரன் என்கிற பேதமே இல்லாமல் ஒரு குடும்பமாகச் சேர்ந்து வடம் பிடிக்க வந்தார்கள்.

(தேர்த்திருவிழாவில் மடி விழுப்பே பார்க்கக் கூடாது என்கிறது சாஸ்திரம். ராஜாவிலிருந்து, யக்ஞம் செய்த தீட்சிதரிடமிருந்து ஆரம்பித்துக் குடியானவன் வரையில் எல்லோரும் சமமாகச் சேர்ந்து தேர் இழுக்கவேண்டும். அப்புறம் வீட்டுக்குப் போனபின் எப்படிப்பட்ட ஆசாரக்காரராக இருந்தாலும், விழுப்பு வந்து விட்டதாக நினைத்து ஸ்நானம் செய்யக்கூடாது. கோயிலுக்கு வராதவர்கள் உள்பட, ஜனங்கள் எல்லோரையும் பார்ப்பதற்காக ஸ்வாமியே கோயிலிலிருந்து வெளியிலே வருவதாக ரதோற்சவம் வைக்கப்பட்டது. இப்போதும் எல்லா க்ஷேத்திரங்களிலும் இந்த மாதிரி தேர்த்திருவிழா நடக்கவேண்டும் என்பது என் ஆசை. 'மெஷின்' வைத்து ரதம் ஓட்டக்கூடாது. அதில் பெருமை இல்லை. பழைய நாள் போலவே எல்லாரும் சேர்ந்து—பகவத் கைங்கரியம் என்கிறதோடு எல்லாரும் சேர்கிறதே முக்கியம்—சகல ஜனங்களும் ஒரே ஈசுவரனின் குழந்தைகளாகச் சேர்ந்து நின்று வடம் இழுக்கிற ரதோற்சவம் தான் நிஜமான சோஷலிஸம். சின்னக் கோயில்களில் கூட, தேர் நிர்மாணிக்க

வசதி இல்லாத கோயில்களில் கூட, சப்பரம் மாதிரியாவது கட்டி சர்வ ஜனங்களும் சேர்ந்து அதை இழுத்துக் கொண்டு வரவேண்டும் என்பது என் ஆசை. உற்சவம் என்பது தேவஸ்தானத்தையும், உபயதார்களேயும் மட்டும் சேர்ந்த விஷயமாக இல்லாமல் அதில் ஊர் ஜனங்கள், சரீரத்தால் கலந்து கொள்வது இதில்தான். அதோடு பரஸ்பரம் சேர்ந்து ஐக்கியமாக நிற்கிறதும் இதில்தான்.)

திருக்களரில் புதிதாகச்செய்த தேரை இழுத்தார்கள். அது குலுங்கிக்கொண்டு கிளம்பியது.

ஒரே சந்தோஷ ஆரவாரம்.

ஆனல் சிறிது நாழிக்குள் சந்தோஷம் அடங்கிப் போயிற்று.

சிறிது தூரம் ஆடி ஆடிப்போன சிங்காரத்தேர் நின்றுவிட்டது. எத்தனை பிரம்மப் பிரயத்தனம் செய்தும் அது கிளம்புகிற வழியாக இல்லை.

எல்லோரும் ஸ்வாமிகளிடம் வந்தார்கள். ''நீண்டகால சம்பிரதாயத்தை மீறியதால் தான் இப்படி ஆயிற்று ! பலி தந்தால்தான் இனிமேல் தேர்நகரும். இதை ஸ்வாமிகளே நிதரிசனமாகப் பார்த்துவிட்டதால், இனிமேலாவது பலி தருவதற்கு அங்கீகாரம் தர வேண்டும்'' என்ருர்கள்.

ஸ்வாமிகள் தீர்க்கமாக யோசிக்கலானுர். கடைசியில் சொன்னுர். இவரா விரப்ப ஸ்வாமிகள் என்று அதிசயிக்கிற விதத்தில் 'சாந்தப்ப ஸ்வாமிக'ளாகச் சொன்னுர்:''நீங்கள் ஒரு ஆட்டையோ, கோழியையோ, பலி தந்தால், 'நம் அம்மா போய்விட்டாளே' என்று அழுவதற்கு ஒரு ஆட்டுக் குட்டியோ, கோழிக் குஞ்சோ இருக்கும். அல்லது ஆட்டுக்குட்டியையோ, கோழிக் குஞ்சையோ பலிதந்தாலும் அதற்காகப் புத்திர சோகத்தில் அழுவதற்கு ஒரு அம்மா ஆடோ, அம்மாக் கோழியோ இருக்கும். ஓர் உயிர் போகிறதோடு, உயிரோடு இருக்கிற இன்னெரு ஜீவனும் மாளாத துக்கம் அநுபவிக்கும்படி ஆகும். ஈசுவரனுக்கு இது சம்மதமாக இருக்குமா ? நீங்கள் எல்லாரும் கோயிலுக்குப் போங்கள். ஈசுவரனிடமே முறையிடுங்கள். மன சார முறையிடுங்கள். ரதம் நிர்விக்கின மாக நிலைக்கு வந்து சேர வேண்டும் என்று ஏகமனதாகப் பிரார்த்தனை செய்து கொண்டு திரும்பிவாருங்கள். மறுபடியும் இழுத்துப்பாருங்கள். அப்போதும் தேர் ஓடவில்லை என்ருல் பலி தரலாம். 'ஈசுவரனின் லீலை யாருக்குப் புரியும் ? எந்தக் காரணத்துக்காகவோ அவனே பலியை விரும்புகிருன்' என்று நினைத்துப் பலிதரலாம். ஆனல் ஆடோ, ஆட்டுக் குட்டியோ, கோழியோ, கோழிக் குஞ்சோ பலி தர வேண்டாம். என்னையே பலியிட்டுக் கொள்கிறேன். தேர்ச்சக்கரத்தின் கீழ் என்னையே கிடத்தி விடுகிறேன். தேர் என்மேல் ஓடட்டும். ஈசுவரனுக்குப் பலியாக இந்த வாழ்வு முடிந்து போகட்டும். எனக்காக அழுவதற்கு அம்மாவும் இல்லை, குழந்தையும் இல்லை. இந்தத் தேரைச் செய்வதற்குக் காரணமாக இருந்த நானே அது ஓடுவதற்கும் பொறுப்பாகிறேன்.''

எல்லோருக்கும் மனசு உருகிப் போய் விட்டது.

தேர் கிளம்ப வேண்டும் என்கிற ஆர்வத்தைவிட மகானுகிய வீரப்ப ஸ்வாமிகள் பலியாகி விடக் கூடாது என்கிற எண்ணம் அவர்களுக்குத் தீவிரமாகி விட்டது.

எல்லோரும் கோயிலுக்குப் போய் ஈசுவரனை மிகுந்த பக்தி சிரத்தையுடன் பிரார்த்தித்தார்கள்.

திரும்பி வந்து வடத்தைப் பிடித்து இழுத்தார்கள்.

எல்லோருக்கும் ஒரே ஆச்சரியமாகி விட்டது.

தேர் அசைந்து கொடுத்தது. அத்தனை நேரம் சண்டித்தனம் செய்த ரதம், பிரார்த்தனைக்குப் பின் சுலபமாக நகர்ந்துவிட்டது.

பக்தர்கள் எல்லாரும் பரவசத்துடன், பெரிய பாரம் தீர்ந்தது என்ற நிம்மதி யோடு 'கரகர' என்று இழுத்துவர, ரதம் கிறுகிறுவென்று நகர்ந்து வந்தது.

வீரப்ப ஸ்வாமிகளின் குடிசைக் கெதிரே ரதம் வந்தது. அவர் தேரில் ஆரோகணித்திருந்த ஈசுவரனை அப் படியே பார்த்த கண் பார்த்தபடி நின்று விட்டார். ஸ்வாமி தமக்குக் காட்டிய மகத்தான அனுக்கிரகத்தை நினைத்து மெய்மறந்து போனார் ஸ்வாமிகள். "கோபிஷ்டனான எனக்கும் கூட, இந்தக் கலிகாலத்தில், இப்படிப் பிரத் தியட்சமாகக் கிருபை செய்து விட் டாயே!" என்று கதறினார்.

ஈசுவரனின் பக்த வாத்ஸல்யத்தை எண்ணி எண்ணி உருகினார்.

ரதத்தில் அம்பாளோடு எழுந்தருளி யிருந்த ஸ்வாமிக்குக் கர்ப்பூர தீபா ராதனை காட்டினார்கள்.

வீரப்ப ஸ்வாமிகள் தாரை தாரையாக ஆனந்த பாஷ்பம் பெருக, ஈசுவரனின் கிருபையைத் துதித்தபடி அப்படியே கீழே சாய்ந்தார்.

சுப்பராய அய்யரின் தோளில் சாய்ந்து விட்டார் வீரப்ப ஸ்வாமிகள். கர்ப்பூர ஜோதி போலவே அவருடைய உயிர் பரஞ்ஜோதியான ஈசுவரனிடம் கலந்து ஒடுங்கிவிட்டது! அன்பே சிவமாகி விட்டார்.



## சீமைக்குச் சென்ற

# முதலாவது நாட்டுக் கோட்டைச் செட்டியார்

1907 மார்ச் மாதம் 28-ந் தேதி வியாழக்கிழமை மாலே சுமார் ஆறரை மணிக்கு மதராஸ் ரெயில்வே மார்க்க மாய் பம்பாய்க்குப் போய், அங்கிருந்து சனிக்கிழமை கப்பலேறி சீமைக்கு (இங்கிலாந்துக்கு)ச்செல்லும் பொருட்டு கரு.முத்து ராமநாத செட்டியார் என்கிற ஒரு நாட்டுக்கோட்டை முதலாளி பிரயாணப்பட்டார்.

அவருடன் கூட சிதம்பரம் வை. இரத்தின சோமநாதப் பிள்ளே என்பவர் ஒருவர் பாரிஸ்டர் பரீக்ஷைக்குப் படிக்கும் பொருட்டுத் தொடர்ந்து சீமைக்குச் சென்ருர். இவர் ஜாதியில் வேளாளர். சமயம் சைவம். இவ்விருவரும் ஒன்று சேர்ந்தது மிக்க நலமே.

மிஸ்டர் செட்டியாரவர்கள் தனது குடும்பத்தில் மூத்தோர்களுக்கும் அறிவித்து தமது கடைகளில் செய்துவரும் சீமை ஜவுளி சரக்கு வியாபார விஷயமாக மான்செஸ்டர் முதலான நகரங்களில் அநேக விஷயங்களே நேரில் கவனித்துவர நிணக்கிருர்.

இந்த கடையார் கொளம்பு, மதுரை, சென்னே இம் மூவிடங்களிலும் ஏராளமாய் மேற்கூறிய வியாபாரம் நடத்தி வருவதாலும், சில வருஷகாலமாய் அவுசுகள் மூலமாயின்றி தாங்களே சீமையிலிருந்து சரக்குகளே வருத்திக் கொண்டு வருகிறபடியாலும், மேற்படி செட்டியார் மூவாயிரம் ரூபாய் செலவழித்து, இங்கிலாந்துக்குச் சென்று, ஒரு வருஷகால மிருந்து கைத்தொழில் களேக் கவனிக்க யோசித்திருக்கிருர்.

பருத்தியை நூற்று நெசவு செய்து வரும் பல வகைப்பட்ட இயந்திரங்களின் சூட்சுமங்களேயும் கவனித்து, அவற்றை வேலே செய்யும் முறைகளேயும் உற்றுப்பார்த்து, கற்றறிந்து அதனுல் நமது தேசத்தில் ஜனேபகாரமாக புதிதாயும் செட்டாயும் கைத்தொழில்களே மேற்படி செட்டியார் தான் திரும்பி வந்தபிறகு அமைப்பாராயின், அவர் உண்மையான தேசாபிமானி யென்றும், யதார்த்தமான செட்டியாரென்றும், பரோபகார சிந்தையுள்ள மகா புருஷரென்றும் விசேஷமான பிரசித்தியை அடையக்கூடும்.

மிஸ்டர் ஜி. சுப்பிரமணிய ஐயரவர்கள் சுதேசக் கருத்து என்னும் விஷயத்தைப் பற்றி அவருக்கு மிகவும் போதித்துப் பேருக்கம் கொள்ளும்படி செய்வித்தாரென்று கேள்விப்பட ஆனந்திக்கிருேம். அவர் கனம் தாதாபாய் நௌரோஜி அவர்களுக்கும், மிஸ்டர் வாச்சா அவர்களுக்கும், சிபார்சு கடிதங்கள் கொடுத்து, மேற்படி செட்டியாருக்குத் தைரியமூட்டி சீமைப்பிரயாணம், சீமையில் வாசத்தின் அனுபவம் முதலியனவும் சொல்லியனுப்பி யிருக்கிருரென்று அறிகிருேம்.

—ஒரு சுதேசி.

'சுதேசமித்திரன்'

*8-4-1907.*

நன்றி, "குமரி மலர்"

# கல்வியும் வேலை வாய்ப்பும்

'சோமலெ'

இப்போது தமிழ்நாட்டில் இயங்கி வரும் நகரத்தார் சங்கங்களுள் திருச்சி நகரத்தார் சங்கம் காலத்தால் பழமை யானது. சொந்தமாக, புதிய நகரவிடுதி அமைத்து, ஏனைய நகரத்தார் சங்கங் களுக்கு வழிகாட்டிய பெருமையும் உடையது. வெள்ளி விழாக் காணும் இச்சங்கம் தொடர்ந்து பணி புரிந்து பொன் விழாவும், வைர விழாவும் நூற் ருண்டு விழாவும் காணுவதாக.

உயர்கல்வி பயில விருப்பம் இருந்தும், அதற்குரிய செலவைச் செய்ய வழியில் லாமல் நம் இனத்தவர் பலர் தவித் தனர். அந்தச் சூழ்நிலையில் மாணவர் களுக்குக் கடன் வழங்க ஓர் அமைப்பை திருச்சி நகரத்தார்கள்தான் ஏற்படுத்தி ஞர்கள். அவர்களுடைய உள்ளப் பாங்கைப் போற்றுகிறேன், பாராட்டு கிறேன்.

இன்று மாறுபட்ட ஒரு சூழ்நிலை நிலவு கிறது. நன்ருகப் படிக்கக் கூடியவர் களுக்கு அரசாங்க அமைப்புக்களும் ரோட்டரி லயன்ஸ்போன்ற கழகங்களும் தாராளமாக உதவுகின்றன. இந்தியா விலுள்ள சில பெரிய பாங்குகள் உயர் கல்விக்கு 4½% வட்டிக்கு, அதாவது காலே அரைக்கால் வட்டிக்குக் கடன் கொடுக்கின்றன.

இன்றைய நிலை, படித்த பிறகு வேலை கிடைப்பதில்லை என்பதாகும்.

இந்த நிலைமைக்குக் காரணங்கள் இரண்டு.

(1) மாணவர்களுக்குப் போதிய பொது அறிவோ பழங்காலத்தில் நம்ம வர்களிடம் இருந்த பண்பாடோ இல்லை. நகரத்தார்கள் சற்று முயன்று, தங்கள் குழந்தைகளுக்கு இத்தகைய குறைகள் இல்லாமல் செய்யவேண்டும்.

பலருடைய கையெழுத்து எவ்வாறு இருக்கிறது என்பதை நான் சொல்ல வேண்டுவதில்லை. தலையெழுத்தைத் திருத்த முடியாவிட்டாலும் கையெழுத் தையாவது திருத்திக் கொள்ளக் கூடாதா?

எந்தத் துறையில் வேலைக்குச் சென்ரு லும் மொழி அறிவு வேண்டும். தமிழ், ஆங்கிலம் இரண்டிலுமே நன்கு எழுத வும் பேசவும் தெரியாவிட்டால் எந்த வேலையில் சேர்ந்தாலும் முன்னேறுவது கடினம். எத்தனை மொழிகள் தெரிந்து கொண்டாலும், அது நன்மையையே பயக்கும். பிறர் எப்படிப் போனுலும் வணிகராகிய நாம் ஹிந்தியை ஓரளவா வது படித்துக் கொள்வது நமக்கு நலம் விளைவிக்கும்.

எவ்வளவு பெரிய பொறுப்பான வேலை பார்த்தாலும் தட்டச்சு, சுருக்கெழுத்து, கணக்கியல் (Typewriting, Shorthand, Accountancy) அறிவு பெரிதும் உதவி யாக இருக்கும். இதை நம்மவர்கள் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

பாய்மரக் கப்பல்களில் துணிச்ச லுடன் கடல் கடந்து சென்ற இனம் நம் இனம். நம் மொழி தெரியாதவர்களுடன் பேசிப் பழகி வாழ்க்கையில் வெற்றி

கண்ட இனம் நம் இனம். ஆனல், இன்று நம் இளைஞர்கள் திருச்சியிலேயே வேலை கிடைத்தால் நல்லது என்று எண்ணுகிருர்கள். இந்த மனப்பான்மை மாறவேண்டும்.

பலருக்கு, வேலை கேட்கும் மனுவை எப்படி எழுதுவது என்றே தெரியவில்லை. அந்த மனுக்களைப் பார்த்த அளவிலேயே நிச்சயமாக ஒருவரும் வேலை கொடுக்கமாட்டார்கள். எப்படி அந்த விண்ணப்பத்தை எழுதுவது என்பதை அனுபவம் உள்ளவர்களிடம் தெரிந்து கொண்டு எழுதவேண்டும்.

(2) வேலை கிடைக்கக்கூடிய பல படிப்புக்கள் உள்ளன. நம்மவர்கள் அவற்றைப் படிக்காமல் வழக்கம் போல P. U. C., B.A , B.Sc., தமிழ்ப் புலவர் படிப்புக்களைப்படித்து வேலை இல்லையே என்று ஏங்குகிருர்கள்.

பொறியியல் படிப்பில் Indian Institute of Technologyயில் படித்து வருபவர்களுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது, சென்னையில் Institute of Film Technology, Institute of Catering Technology and Applied Nutrition, Regional School of Printing, Government College of Arts and Crafts, School of Gardening and Horticulture போன்ற எத்தனையோ கல்வி நிலையங்கள் உள்ளன. இவ்வாறே குறிப்பிட்ட வேறு பல துறைகளுக்கு பெங்களூர், கோயமுத்தூர் போன்ற நகரங்களில் கல்வி நிலையங்கள் உள்ளன. இவற்றில் படிப்பவர்களுக்கு வேலை இல்லை என்ற பேச்சே கிடையாது.

கிடைத்த ஏதாவது ஒரு சிறு வேலையை முதலில் ஒரு பெரு நகரத்தில் ஒப்புக்கொண்டு தமிழ்நாடு அரசாங்கம் நடத்தும் மாலை நேரக் கல்லூரிகளிலோ டில்லி, மதுரை பல்கலைக்கழகங்கள் நடத்தும் Correspondent Courseகளிலோ, பாரதீய வித்யாபவன் நடத்தும் ஏராளமான மாலை நேரப் படிப்புக்களிலோ சேர்ந்து தங்களுடைய கல்வித் தகுதியை நம்மவர்கள் வளர்த்துக் கொள்ளவேண்டும். முதலிலேயே பெரிய சம்பளத்தில் சேரவேண்டும் அல்லது சம்பளத்தை வாங்கி குழந்தைக்குப் புதுமை செய்ய வேண்டும் என்று நினைத்தால் அந்த எண்ணம் இன்றய காலப் போக்குக்குப் பொருந்தாது.

வெளி நாடுகளுக்குப் போய் Business Administration, Banking, Insurance ஆகியவற்றில் இரண்டு மூன்று ஆண்டுகளுக்குப் படித்து மிகச் சிறந்த பயிற்சி பெற எம். சிடி. எம். சிதம்பரம் செட்டியார் மெமோரியல் டிரஸ்ட் ஆண்டு தோறும் பணங்களை வாரி வழங்குகிறது. நம்மவர்கள் இவற்றுக்கெல்லாம் முயலாதது ஏன் ?



உ

# நகரத்தார் ஐக்கிய சங்கம்,

**3-4, பவளக்காரத் தெரு, சென்னை-1.**

**தோற்றம் :**

1965-ம் ஆண்டு ஜூலை மாதம் நகரத்தார் முதல் மாநில மாநாடு சென்னையில் கூடி நகரத்தார் பொதுநலங்களைப் பாதுகாக்க ஒரு கழகம் அமைப்பதாகத் தீர்மானம் நிறைவேற்றியது. அதில் அமைக்கப்பெற்ற அமைப்பியல் குழு பலமுறை கூடி 'நகரத்தார் ஐக்கிய சங்கம்' என்ற பெயருடன் சங்கத்தினை உருவாக்கினர்கள். பல நகரத்தார் சங்கங்களும் இதில் ஐக்கியமாவதால் ஐக்கிய சங்கம் என்ற பெயர் சூட்டப்பெற்றது.

**நோக்கம் :**

நகரத்தார்கள் பொது அமைப்பாக இது இயங்க வேண்டுமென்றும், செட்டி நாட்டிலுள்ள எல்லா ஊர்களுக்கும், செட்டிநாடு அல்லாது பிற ஊர்களில் இயங்கும் பதிவுபெற்ற நகரத்தார் சங்கங்களுக்கும் பிரதிநிதித்துவம் கிடைக்கும் வகையிலும் உறுப்பினர்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். கல்வி வளர்ச்சி, வேலை வாய்ப்பு தேடித் தருதல், மருத்துவ உதவி போன்றவை செய்தல். நன்கொடை மூலமாகவும், உறுப்பினர் கட்டண மூலமாகவும் நகரத்தார் பொது நன்மைக்கென வழங்கப்பெற்று பயன்படுத்தப்படாமல் இருக்கும் பணங்களைப் பெற்றும் இச்சங்கத்துக்கு நிதி திரட்டுவது.

**வளர்ச்சி :**

சங்கம் 1966-ல் சென்னையில் பதிவு செய்யப்பெற்று 3-4, பவளக்காரத் தெருவில் இயங்குகிறது. சென்னை, மதுரை, திருச்சி, கோவை, சேலம், தென்னுற் காடு, ஈரோடு நகரத்தார் சங்கங்கள் இதில் பிரதிநிதித்துவம் வகிக்கின்றன. மற்றும் எல்லா நகரத்தார் ஊர்களிலிருந்து பிரதிநிதிகள் உள்ளனர். நகரத்தார் சங்கங்களின் பிரதிநிதிகள் எழுவருடன் தேர்வு செய்யப்பெற்ற 31 உறுப்பினர் களும், ரூ. 20,000/-க்கு மேல் நன்கொடை தந்த நகரத்தார் பெருமக்களும் உறுப்பினர்களாயுள்ள செயற்குழு சங்கத்தை நிர்வகிக்கிறது.

| | | |
|---|---|---|
| இதன் தலைவர் | உயர்திரு. | ராஜா சர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள். |
| உபதலைவர்கள் | உயர்திரு. | கருமுத்து தியாகராச செட்டியார் அவர்கள். |
| | ,, | அ. மு. மு. அருணாசலம் செட்டியார் அவர்கள். |
| | ,, | மு. சித. முத்தையா செட்டியார் அவர்கள். |
| | ,, | வ. செ. சிவலிங்கம் செட்டியார் அவர்கள். |
| செயலாளர் | ,, | குமு. முருகப்பன் அவர்கள். |
| துணைச் செயலாளர் | ,, | ஆவி. க. மெ. அரு. தியாகராசன் செட்டியார் அவர்கள். |
| பொருளாளர் | ,, | சுப. வயிரவன் செட்டியார் அவர்கள். |

**செயல்கள் :**

இதுவரை ரூ. 1,88,771/- நிதி வசூலித்திருக்கிறது. வாக்களித்து இன்னும் தரவேண்டிய தொகை ரூ. 2,87,519/-. கல்வி வளர்ச்சிக்காகக் கீழ்க்காணும் வீதம் ஆண்டுதோறும் உதவி வழங்கப்பெற்றது.

| ஆண்டு. | இலவச உதவி. | கடன் உதவி. | மொத்தம். |
|---|---|---|---|
| பராபவ ஆண்டு | 4,397 | 6,700 | 11,097 |
| பிலவங்க ஆண்டு | 8,075 | 6,750 | 14,825 |
| கீலக ஆண்டு | 6,285 | 9,600 | 15,885 |
| சௌமிய ஆண்டு | 3,550 | 11,300 | 14,850 |
| சாதாரண ஆண்டு | 3,165 | 10,800 | 13,965 |
| விரோதிகிருது ஆண்டு | 4,875 | 12,200 | 17,075 |
| | 30,347 | 57,350 | 87,697 |

மொத்தம் 100 மாணவர், 74 மாணவிகள் பயன் அடைந்துள்ளார்கள்.

திருமண உதவியாக ரூ. 7,000/- 1966—1967 ஆண்டுகளில் கொடுக்கப் பெற்றது. நமது சங்கத்துக்கு வாங்கும் நன்கொடைகள் வருமான வரி விலக்கு கிடைக்கவேணும் என்பது மேலும் நன்கொடைபெற அவசியமாகக் கருதப்பெற்ற தால் திருமணஉதவி இத்துடன் நிறுத்தப்பெற்றது. கொடுத்துள்ள துகையையும் தனியாரிடமிருந்து நன்கொடையாக வசூல் செய்துகொள்வதெனத் தீர்மானித்து வசூலும் செய்திருக்கிறது.

வங்கிகளிலும், கம்பெனிகளிலும் டெபாசிட்டில் ரூ. 95,000/- இருக்கிறது. கட்டிடம் அமைக்க முயற்சி நடந்துகொண்டிருக்கிறது.

நகரத்தார் தொழிற்பயிற்சிப் பள்ளி (Industrial Training Centre) ஒன்று சென்னையில் நிறுவ தீர்மானமாயிருக்கிறது. இந்த தொழிற்பயிற்சிப் பள்ளியில் S.S.L.C. தேர்வுபெற்ற சுமார் 36 மாணவர்களை (Skilled Workers) திறமையான வேலையாளர்களாய் ஆண்டுதோறும் பயில்விப்பதும், இதற்கான நிதியினை அந்த தொழிற்கூடத்தில் தயாராகும் பொருள்களை விற்றுப் பெறுவதெனவும் திட்டம். சென்னையை அடுத்துள்ள ஆவடியில் இது அமைக்கப்படலாம். இதற்கான கீழ்க் கண்டவர்களை அங்கத்தினராய்க் கொண்ட குழு அமைக்கப்பெற்றுள்ளது.

1. உயர்திரு மு. மு. முத்தையா செட்டியார் அவர்கள்.
2. ,, சு. ராம. பழ. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள்.
3. ,, அ. கணபதி செட்டியார் அவர்கள்.
4. ,, ராம. பழனியப்பன் அவர்கள்.
5. ,, அரு. லெட்சுமணன் அவர்கள்.
6. ,, கே. ராமனுதன் அவர்கள்.
7. ,, குமா. முருகப்பன் அவர்கள்.

சங்கம் ஏற்படுத்தப்பட்டபோது எதிர்பார்த்த அளவு எல்லாத்துறையிலும் வெற்றிகரமாகச் செயல்பட இயலாமைக்கு நகரத்தார்களிடத்தில் ஐக்கியம் குறைவாயிருப்பதுதான் காரணம். பொது நன்மைக்காக எல்லோரும் ஒன்றுசேர்ந்து உழைக்கும் நமது பழைய மரபு குறைந்து, செயலாற்றுபவர்களை குறைகூறுவதையே நம்மில் சிலர் வழக்கமாகக் கொண்டிருப்பதாலும், பொதுவாக நகரத்தார் நன்மைக்கு வழங்கப்பட்ட நிதிகளை நகரத்தார் ஐக்கிய சங்கத்திடம் ஒப்புவிக்க யாரும் பெருந்தன்மையுடன் முன் வராததாலும் சங்கம் இணங்கியவரையில் நன்மைகளைச் செய்து கொண்டிருக்கிறது. சங்கத்தின் செயலாளர் என்ற முறையில் நகரத்தார் பெருமக்களைப் பணிவன்புடன் வேண்டுவது ஐக்கியமாகச் செயல்படுங்கள். வேற்றுமைகளை மறந்து பொதுநன்மைக்கு உதவுங்கள். பொது நன்மைக்கான நிதிகளை நகரத்தார் இளஞ்சந்ததியினரின் முன்னேற்றத்துக்காக பயன்படுத்த நகரத்தார் ஐக்கிய சங்கத்திடம் தாருங்கள். வேண்டிய அளவு நிதிவசதியும், திறமையும் நம்மவர்களுக்கு இருந்தும் சரியாகப் பயன்படுத்தாத நிலையிலிருக்கிறது. நமது முன்னேற்றத்துக்கு நாமே தடையாயில்லாமல் ஒற்றுமையுடன் செயலாற்றினுல் எல்லாத்துறையிலும் வெற்றி நிச்சயம்.



# இறைமை

K. N. சுப்பையா, சென்னை.

ஆதியும் அந்தமும் அற்றது இறைமை. ஆவதும் அழிவதும் கடந்தது. ஆணும் பெண்ணும் அல்லாதது. அருவமும் உருவமும் இல்லாதது. அங்கு இங்கு எனாது எங்கும் நீக்கமற நிறைந்தது.

எல்லா உயிர்களுக்கும் தோற்றமாக உள்ளது இறைமை. ஆனால் இறைமைக்குத் தோற்றமில்லை. உயிர்களனைத்திற்கும் ஈறாக உள்ளதும் இறைமையே, ஆனால் இறைமைக்கு ஈறு கிடையாது.

திருநாவுக்கரசர் இறைமையை பண்ணின் ஓசையிலும், பழத்தின் சுவையிலும், திருவாய்மொழி இறைமையை உண்ணும் சோற்றிலும், பருகும் நீரிலும், தின்னும் வெற்றிலையிலும், பாரதியார் இறைமையை காயின் புளிப்பிலும், கனியின் இனிப்பிலும், காற்றின் குளிரிலும், கனலின் சூட்டிலும் காணும் பொழுது நம்மில் பலர் இறைமையை, பரம் பொருளை, செம் பொருளை சிவன் என்றும், விஷ்ணு என்றும், அல்லா என்றும், ஏசு என்றும், முருகு என்றும், அழகு என்றும் அழைப்பதில் வியப்பென்ன ?

குயிலை, காகம் என்று அழைப்பதால் மட்டும் குயிலின் குரலினிமை குறைந்து விடுமா ? ரோஜா மலரை எருக்களைப் பூ என்று அழைப்பதால் மட்டும் மலரின் மணமும் மென்மையும் குன்றி விடுமா ? இல்லை. ஒரு பொருளை எப் பெயர் கொண்டு அழைத்தாலும், அப்பொருளின் தன்மை, நயம், இயல்பு மாறி விடுவதில்லை. அதுபோல் ஆண்டவனை எப் பெயர் கொண்டழைத்தாலும் முதலும் முடிவுமாகிய அவன் ஒருவனேயன்றி ஒன்றுக்கு மேற்பட்டவனல்லன். பின்னர் பல மதங்களும், ஒரு மதத்தினருக்கு பல கடவுள்களும் ஏன் என்ற வினா எழுமில்லையா ? கலைக் கூடம் ஒன்றில் ஆயிரம் அன்பர் கூட இட வசதி இருக்கிறது. ஒரு நுழை வாயில் இருந்தாலே போதும், இருப்பினும் கூடங்கள் அனைத்தும் பல நுழை வாயில்களை உடையனவாக இருப்பது ஏன் ? கூடத்திற்குள் ஒரு நுழை வாயில் வழியாக பலர் வந்தடையும் காலத்தை விட பல நுழை வாயில்கள் வழியாக சிலர் சிலராக எளிதில் குறுகிய காலத்தில் வந்தடைந்து விடுவர்.

உயிர்களின் தோற்றம் இயற்கையானது. பற்று அறுத்து துறவு பூண்டு மனிதத் தன்மையிலிருந்து விடுபட்டு, இறைமைத் தன்மை பெற்றவர்களின் வடிவங்கள்தான் தெய்வங்கள். நீங்களும் நானும் தெய்வமாகலாம். கண்ணகியும், பட்டினத்து அடிகளும் தெய்வமான நிலை இதுதான். ஆனால் கற்பிற்கு ஒரு தெய்வம் கண்ணகியும், துறவுக்கு ஒரு தெய்வம் பட்டினத்துப் பிள்ளையும் இறைமைத் தன்மையை அடைந்தாலும், வணிகத் தலைவனுக்கும், காப்பியத் தலைவிக்கும் தோற்றம் உண்டு. ஆனால் ஈறு கிடையாது. இருவரும் புகார் நகர் புறத்தே தோன்றியவர்கள். ஒரு குலத்தில் பிறந்தவர்கள்.

புகார் நகர் விட்டு கற்புத் தெய்வம் புறப்பட்டு மதுரை நகர் சென்று நீதியை நிலை நாட்டி தெய்வத் தன்மை பெற்றாள். அடிகள் புகார் நகர் விட்டு வட திசை சென்று தலங்கள் கண்டு, தொண்டை மண்டலத்தில் நாம் இப்பொழுது இருக்கும் இடத்தில் கோயில் கொண்டார்.

பற்று அறுப்பதென்பது எளிதல்ல. கௌதமன் புத்தனுர் பற்று அறுத்த நிலையில், காவிரிப்-பூம்பட்டினத்தில வணிகர் குலத்திலே சிவநேசருக்கும், ஞானகலை அம்மையாருக்கும் திரு வெண்காட்டு இறைவன் திருவருளால் பிறந்த திருவெண்காடர் பற்று அறுத்த நிலையில் பட்டினத்தடிகளானுர். கௌதமனுக்கு ஞான உதயம் போதி மரத்தடியில் உண்டாகியது. அடிகளுக்கு அடிகளின் குழந்தை மருதப்பிரான் பற்று அறுத்தலை உபதேசித்தார். அடிகளின் மனைவியார் சிவகலை அம்மை அடிகளார் மகன் பிரிவால் வாடி நின்ற பொழுது சிறு பெட்டி ஒன்றினைப் புதல்வர் தந்ததாகக் கணவரிடம் கொடுத்தார். அப்பெட்டியைத் திறந்து பார்த்த திருவெண்காடர் அதனுள்ளே காதற்ற ஊசி ஒன்றும், ஒரு ஓலை நறுக்கு ஒன்றும் இருத்தல் கண்டு வியந்து நோக்கினுர். நறுக்கில் "காதற்ற ஊசியும் வாராது காண் நுங் கடை வழிக்கே" என்ற சொற்றெடர்களின் பொருள் உலகில் உள்ள பொருள்கள்பால் அடிகளுக்கு உள்ள தொடர்பை துண்டித்தது. பட்டினத்துச் செட்டியார், பட்டினத்து அடிகளாகி பட்டினத்துப் பிள்ளையானுர்.

"மாடுண்டு கன்றுண்டு மக்களுண்
டென்று மகிழ்வதெல்லாங்
கேடுண்டெனும்படி கேட்டு விட்
டோமினிக் கேண் மனமே
ஓடுண்டு கந்தையுண்டுள்ளே
யெழுத்தைந்து மோதவுண்டு
தோடுண்ட கண்ட னடியார்
நமக்குத் துணையுமுண்டே"

எப்படி பற்று அறுத்த நிலையில் இருப்பது என்று பாடி மகிழ்ந்துள்ளார். கையிலிருந்த ஓட்டையும், உடன் இருந்த நாயையும் கண்டு அடிகளார் பத்திரகிரியாரை குடும்பி என்றழைத்தார் என்றுல் பற்றறுப்பது எந்த அளவிற்கு என்று நினைத்துப் பாருங்கள்.

முற்றும் துறக்கும் பெருந்திறம் இவர்கட்கு இயல்பாக அமைந்துள்ள திறத்தினைப் புகழ்ந்துரைக்க மொழி இல்லை. தாயுமானவர்

"ஓட்டுடன் பற்றின்றி உலகைத்
துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்ரகிரி பண்புணர்வ
தெந் நாளோ"

என்று புகழ்ந்து "ஆருந் துறக்கை அரிதரிது" என்று கூறுவதையும் இங்கு நினைத்தல் இயல்பு.

முழுத் தூய்மையும், துறவும் பூண்ட பட்டினத்தடிகள்

"பிறப் பறுக்கல் உற்ருர்க்கு உடம்பும் மிகை" என்ற மறைப்படி உடம்பை மிகுதியாகக் கருதி ஒதுக்கி இறைவன் திருவடியில் தம்மை தோய்வித்துக் கலந்தவர். திருவொற்றியூர் கடற்கரையில் இவரது புறவாழ்வு முடிந்த விடத்தில் இருந்து நாம் பேசிக் கொண்டிருக்கிறேம். புற உடலால் மறைந்துவிட்ட போதிலும் தாம் அருளிய தத்துவப் பாடல்களால் எங்கும் என்றும் நிறைந்து நிற்பவர் இச்சான்ரேர்.



# தென்னார்க்காடு நகரத்தார் சங்கம், சிதம்பரம்.

## (தோற்றமும் வளர்ச்சியும்)

D. அருணசலம், M. A.,

நகரத்தார்களுக்குத் தொன்றுதொட்டுத் தென்னார்க்காடு மாவட்டத்தில் மிகுந்த ஈடுபாடு இருந்து வந்திருக்கிறது. இம்மாவட்டத்தில் சைவத் தலங்களாகிய சிதம்பரம், மைலம், திருவேட்களம், சிவபுரி, திருக்கழிப்பாலை, திருநாரையூர், திருநெல்வாயில் அறத்துறை, கூடலையாற்றூர், திருவதிகை, திருநாவலூர், திருமுதுகுன்றம், திருக்கோவிலூர், திருவெண்ணெய் நல்லூர், திருப்பாதிரிப்புலியூர் ஆகிய ஊர்களில் நகரத்தார்கள் அறச் செயல்கள் செய்திருக்கிறார்கள். "நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு" என்னும் நூலிலிருந்து இத்திருப்பணிகளின் மதிப்பீடு சுமார் ஒரு கோடியே நாற்பத்திரண்டு லட்சத்து ஐம்பத்தாறுயிரத்து ஐநூறு ரூபாய் (1,42,56,500 ரூபாய்) என்று தெரியவருகிறது. மேலும் இம்மாவட்டத்தின் முன்னேற்றத்துக்குக் கல்விப் பணியும் நகரத்தார்களால் செய்யப்பெற்று வருகிறது. இதில் தலையாயது அண்ணாமலை அரசர் அவர்களின் வள்ளண்மையால் தோன்றிய அண்ணாமலைப் பல்கலைக் கழகம். இதன் மதிப்பீடு அரைக்கோடி ரூபாய்க்குமேல் என்பர். சிதம்பரத்திலும், அண்ணாமலை நகரிலும் ஆரம்ப, உயர்நிலைப்பள்ளிகளும் முத்தையா பல்தொழிற் பள்ளியும், (பாலிடெக்னிக்) அரசர் குடும்பத்தினரால் தொடங்கப்பெற்று நடைபெற்று வருகின்றன. நகரத்தார்களால் நடத்தப்பெறும் பல்வேறு தொழில்களாலும் இம்மாவட்டம் வளம்பெற்று வருகிறது. இம்மாவட்டத்தில் பஞ்சாலையும் உரத்தொழிற்சாலையும், சர்க்கரை ஆலையும், தோல் பதனிடும் தொழில்களும், நூல் வெளியிடும் நூலகமும், எண்ணெய் ஆலையும், புகைப்பட நிறுவனங்களும், திரைப்பட அரங்குகளும், மருந்தகங்களும், சிறு தொழிலகங்களும், வங்கிகளும், நகரத்தார்களால் நடத்தப்பெறுகின்றன. இம்மாவட்டத்தில் நீண்ட நாட்களாக நகரத்தார்கள் கடவுட் பணியும், கல்விப் பணியும், தமிழ்ப் பணியும், தொழிற் பணியும், இன்னபிற பணிகளும் செய்து வருவது குறிப்பிடத்தக்கது.

இம்மாவட்டத்தில் வாழ்கிற நகரத்தார்கள் எல்லோரும் ஒருவருக்கொருவர் அறிமுகமாகி உதவியாக பழகும் உயரிய நோக்கத்தோடு தென்னார்க்காடு நகரத்தார் சங்கம் என்கிற அமைப்பினை நிறுவுவதற்காக நகரத்தார் பெருமக்களைச் சிதம்பரத்திற்கு வருமாறு திரு 'கெம்பு' சேதுராமன் செட்டியார் அவர்கள் அழைப்பு விடுத்தார்கள். அதன்படி 23-3-1969-இல் சிதம்பரம் கீழவீதி மெ. செ. பாடசாலையில் சிவத்திரு பழ. சண்முகம் செட்டியார் (இராமச்சந்திரபுரம்) அவர்கள் தலைமையில் கூடிய நகரத்தார்கள் விதிமுறைகளை விவாதித்து ஒழுங்குசெய்து, ஏற்றுக்கொண்டு முதற் செயற்குழுவினரைத் தேர்ந்தெடுத்தனர். இச்சங்கம்

சிதம்பரம் பதிவாளர் முன்னர் 611969-ஆம் எண்ணுக 2-4-'69 அன்று பதிவு செய்யப்பெற்றது. செட்டி நாட்டரசர் உயர்திரு. மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் இச்சங்கத்தின் பணியைத் துவக்கிவைத்தார்கள். அவர்களுடைய அருளாசியால் இந்த அமைப்பு வலிவும் பொலிவும் பெற்றுச் சீரியதோர் இயக்கமாகச் சிறந்து ஓங்குகிறது.

இவ்வாண்டின் செயற்குழுவின் தலைவராக உயர்திரு பழ. அ. அண்ணுமலை செட்டியார் (வலையபட்டி) அவர்களும், துணைத்தலைவர்களாக உயர்திரு இராம. கரு. கருப்பையா செட்டியார் (வலையபட்டி) அவர்களும் உயர்திரு T. சிங்காரம் செட்டியார் (நெற்குப்பை) அவர்களும், செயலர்களாக உயர்திரு ச. மெய்யப்பன் (இராமச்சந்திரபுரம்) அவர்களும், உயர்திரு பழ. மாணிக்கம் (உலகம்பட்டி) அவர்களும், பொருளாளராக உயர்திரு இராம. அழகப்பன் (ஓ. சிறுவயல்) அவர்களும் சங்கத்தின் வளர்ச்சிக்குப் பணியாற்றி வருகின்றனர்.

**கல்வி உதவிகள் :**

இந்தியா லெதர் கார்ப்பரேஷன் மானேஜிங் டைரக்டர் தாமரைத் திரு ஆ. நாகப்ப செட்டியார் அவர்கள் "நாகப்பா பவுண்டேஷன்" என்னும் பெயரில் இச்சங்கத்தின் மூலம் மாணவர்களுக்குக் கல்வி உதவிப்பணம் அளிக்க பத்தாயிரம் ரூபாய் தருகிருர்கள். உரிய காலத்தில் அவர்கள் காட்டிய ஆதரவு பொன்னெழுத்துக்களால் பொறிக்கத் தக்கது.

இச்சங்கத்தின் துணைத் தலைவர் திரு. இராம. கரு. கருப்பையா செட்டியார் அவர்கள் அவர்தம் தந்தையார் "இட்லர் இராமநாதன் செட்டியார்" பெயரால் மாணவர்களுக்கு அளித்த உதவிச் சம்பளம் ரூ. 3000 இரண்டு ஆண்டுகளாகக் கொடுக்கப்பெறுகிறது. உள்ளம் உவந்து உதவியளிக்கும் உறுப்பினரால் சங்கம் வலிவும் வனப்பும் பெறுகிறது.

மாணவர்களில் ஒருவரை பகுதி நேர அலுவராகப் பயன்படுத்தி அவருக்குக் கல்வி உதவியாகக் கணிசமானதொகை கொடுக்கப்பெறுகிறது. பழைய மாணவர்களிடமும், ஆசிரியர்களிடமும் புத்தகங்களை வாங்கி "புத்தக வங்கி" (book bank) அமைத்து பல்கலைக் கழகத்தில் பயிலும் மாணவர்களுக்கு இன்றியமையாத தேவையான அரிய நூல்களை வழங்கிச் சிறந்த கல்விப்பணி ஆற்றி வருகிறது.

**சமூக இதழ்கள் :**

நம் சமூக வளர்ச்சியில் பெரும் பங்கு ஏற்கும் சமூக இதழ்கள் "நகரத்தார்", "செட்டிநாடு" இதழ்களுக்கு உறுப்பினர்களை இச்சங்கத்தின் முயற்சியால் சேர்த்துக் கொடுத்து அவ்விதழ்களின் பணி சிறக்கச் செய்து வருகிறது.

**பிற பணிகள் :**

இச்சங்கத்தின் 'தொழில் நலக்குழு', 'கல்வி நலக்குழு' என்னும் இரு பிரிவுகள் அவ்வப்போது செயற்குழுவுக்கு நல்ல திட்டங்களை வகுத்துக் கொடுத்துச் சிறந்த பணியாற்றி வருகின்றன.

இப்பகுதியில் வாழும் நகரத்தார்கள் செட்டிநாட்டுப் பகுதிக்குப் போய்வர இரயில் வசதியில் சில மாற்றங்களை வேண்டி இரயில்வே போர்டிற்கு எடுத்துக்காட்டி எழுதி முயற்சி செய்திருக்கிறது.

நகரத்தார் ஐக்கிய சங்கத்தில் இச் சங்கம் உறுப்பினராகி அதன் வளர்ச்சி யில் ஈடுபாடு காட்டி வருகிறது. ஐக்கிய சங்கத்தில் இச்சங்கத்தின் அங்கத்தினர் களான திரு இராம. கரு. கருப்பையா செட்டியார் அவர்களும், திரு D. அருணு சலம் அவர்களும் பிரதிநிதித்துவ சபை யில் பதவி வகிக்கிருர்கள்.

ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் மானேஜிங் சொசைட்டியின் கோவிலூரில் நடந்த 96 ஊர் நகரப் பொதுக் கூட்டத்துக்கு இச்சங்கத்தின் சார்பாக இரு உறுப்பினர்களை அனுப்பி, காசி நகரச் சத்திரத்தின் வளர்ச்சிக் கூட்டத்திலும் பங்குபெற்று நம் சமூக இயக்கங்களில் எல்லா நிகழ்ச்சிகளிலும் பங்கேற்று உரிய பணிகளைச் செய்து வருகிறது. இச்சங்கத்தின் சார்பாக திரு. இராம. கரு. கருப்பையா செட்டி யார் அவர்கள் உறுப்பினராக நியமிக்கப் பெற்றிருக்கிருர்கள்.

இச்சங்கத்தின் வளர்ச்சியிலும், பணியிலும் செட்டிநாட்டரசர் டாக்டர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் மிகுந்த ஈடுபாடு கொண்டு பல்லாற்று னும் உதவி செய்துவருகிருர்கள்.

முதலாம் ஆண்டுவிழாவில் தாமரை திரு. ஆ. நாகப்ப செட்டியார் அவர்கள் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினர் கள். அவ்வமயம் இச்சங்கத்தின் உறுப்பினர் திரு. ஆறு. அழகப்பன் அவர்களால் நகரத்தார் வளர்ச்சிக்காக எழுதிய 'கறிவேப்பிலை' என்னும் நாடக நூல் வெளியிடப்பெற்றது. அந் நூல் விற்பனையில் கிடைக்கும் தொகை யின் ஒரு பகுதியை நகரத்தார்களின் வளர்ச்சிக்காக இச்சங்கத்தின் மூலம் பயன்படுத்தப்போவதாக திரு. ஆறு. அழகப்பன் அவர்கள் மிகுந்த மகிழ்ச்சி ஆரவாரத்திற்கிடையே அறிவித் தார்கள்.

இரண்டாம் ஆண்டுவிழாவில் திரு. லெ. அழகுசுந்தரம் செட்டியார் அவர் கள் கலந்துகொண்டு சிறப்புரை யாற்றி ஞர். அவர்களும் சங்கத்தின் வளர்ச்சி யில் ஆர்வம் கொண்டு ஆயிரம் ரூபாய் வழங்கி காப்பாளராகச் சேர்ந்து பெரு மைப்படுத்தினுர்கள். அப்பெருந்தகை யாரின் செயல் நம் சமூகப் பெருமக்கள் பலரும் போற்றிப்பின்பற்றவேண்டிய ஒன்ருகும். சேலம் நகரத்தார் சங்கச் செயலர் திரு. பழநியப்ப செட்டியார் அவர்களும் கலந்துகொண்டு நகரத்தார் வளர்ச்சிக்கு மாணவர்கள் செய்ய வேண்டிய கடமைகளை வலியுறுத்திக் காலத்திற்கேற்ற முறையில் நம் சமூகம் பின்பற்றவேண்டிய மாற்றங்களை வகுத்துக்காட்டிச் சிறந்ததோர் உரை நிகழ்த்தினுர்கள்.

உயர்கல்வி கற்க வெளிநாடு சென்ற உறுப்பினர்கள் திருவாளர்கள் N. K. அண்ணுமலை, N. சுப்பிரமணியன், திருமதி. மீனுட்சி கற்பகக்கணபதி அவர்களுக்கும், கல்விப்பணியாற்ற வெளிநாடு சென்ற திரு. சுப. திண்ணப் பன் அவர்கட்கும், உயர் பதவி பெற்று மதுரைப்பல்கலைக்கழகத்துக்குச் சென்ற டாக்டர் V. R. முத்துக்கருப்பன் அவர் கட்கும், நெய்வேலி பழுப்பு நிலக்கரி நிறுவனத்தின் தலைவராகப்பணியேற்ற தொழிலதிபர் திருவாளர் M. V. அருணு சலம் அவர்களுக்கும் பாராட்டு விழாக் கள் நடத்தி, அவ்வப்பொழுது பலர் கலந்து நம் சமூகத்தினர் அடைந்த உயர்நிலைகளைக் குறித்து விழாக்கள் மூலம் சிறப்புச் செய்துவருகிறது.

திரு. 'கெம்பு' சேதுராமன் செட்டி யாரவர்களுடைய ஆதரவோடு அவர் களுடைய ஸ்டுடியோக் கட்டிடத்தில்

இருந்துவந்த அலுவலகத்தை மகுட தனவைசிய பரிபாலன சங்கத்தின் நிர் வாகத்தில் உள்ள சிதம்பரம் நகர விடுதிக்கு உயர்திரு N. வள்ளியப்ப செட்டியார் அவர்களுடைய உதவியால் சென்ற ஆண்டு மாற்றப்பெற்றுள்ளது.

சிறந்த பணிகளைச் சீரியமுறையில் ஆற்றிவரும் திருச்சி நகரத்தார் சங்கம் இச்சங்கத்திற்கு வழிகாட்டியாக இருந்து வருகிறது. அச்சங்கத்தின் "வெள்ளி விழா" கொண்டாடும் இப்பொன்னுன வேளையில் தென்னுர்க்காடு நகரத்தார் சங்கத்தினர் தங்கள் இதயங்கனிந்த வாழ்த்தினையும், நன்றியையும் தெரிவித்துக் கொண்டு மேன்மேலும் வளர அருளுமாறு தில்லையுட் கூத்தனை வாழ்த்தி வணங்குகின்றனர்.



# வாழ்க பல்லாண்டு

கம்பன் அடிப்பொடி : சா. கணேசன்.

"'ஈட்டிய எல்லாம் இதன்பொருட்டு' என்பது,
காட்டிய கைவண்மை காட்டினர்—வேட்டொறும்,
காமருதார்ச் சென்னி, கடல்சூழ், புகார்வணிகர்
தாமரையும் சங்கும்போல் தந்து."

என்பது ஒரு பழம் பாடல். பல நூற்றுண்டுகட்கு முந்திய பாடல். புகாரில் வாழ்ந்திருந்த நகரத்தாரின் அறவுணர்வைப் பாராட்டுகிறது இப்பாடல்.

சோழநாட்டின் கடற்கரைப் பட்டினமான பூம்புகாரில் வாழும் வணிகர்கள், வேண்டுவோர் வேண்டியபொழுதெல்லாம் சங்கநிதி, பதுமநிதியைப் போல் வழங்குவதன் மூலம், தாங்கள் சம்பாதித்தவை யாவும் ஈய்ந்து மகிழுவதற்காகவே என்பதைப் புலப்படுத்தும் முறையில் தங்கள் வள்ளன்மையைக் காட்டினர்களாம்! மனமார்ந்த, மெய்யான பாராட்டு.

அந்தப் பரம்பரையில் வந்தவர்கள் தாம் நாட்டுக்கோட்டை நகரத்தார்களாகிய நாம். பல நூற்றுண்டுகட்கு முன்னரேயே கடல்வழிக் கலம் செலுத்திப் பிறநாட்டுப் பெருவாணிகம் முதலாக உள்நாட்டிலும் சிறிய பெரிய வாணிகத்தையும் மேற்கொண்டொழுகியவர்கள் நாம். 'நகரம்', 'சாத்து', 'சித்திரமேழிப் பெருஞ்சபை' என்றெல்லாம் பெயர்களைக் கொண்ட வாணிகச் சங்கங்களை அவ்வத்துறைகளுக்காக நிறுவிக்கொண்டு வாணிகம் பேணித் தமிழகம் உலகச் சந்தையில் உயர்நிலையில் இருக்கச் செய்த அருமையை வரலாறு கூறும்.

அன்று நம்மை அரசு மதித்தது. நம் நாணயத்திலும், நா நயத்திலும் பெரு நம்பிக்கை வைத்திருந்தது. நாமும் அறம் தவருமல், உரை குன்ருமல், நேர்மை பிறழாமல் வாழ்ந்தோம். ஆலயங்களில் அரசர்கள் வைத்த கட்டளைகளின் முதலீட்டுப் பொன்னை நம்மிடமே கொடுத்துவைத்து அதன் பொலிசையில் (வட்டிவருமானத்தில்) இருந்து அந்தக் கட்டளைகளை நிறைவேற்ற வழிவகை செய்துள்ளதைப் பல சாசனங்கள் இன்றும் உணர்த்திக் கொண்டிருக்கின்றன.

இவற்றை எல்லாம் நாம் எண்ணிப் பார்த்து நம் பண்டைப் பெருமைகளை உணர்வதுடன், காலம், தேசம், உலகப்போக்கு முதலியவற்றிற்கு ஏற்ப வழி-துறைகளை மாற்றிக் கொள்ள வேண்டும். அப்படி இவற்றை மாற்றிக் கொண்டாலும் அற உணர்வையும், நாணயத்தையும், நா நயத்தையும் எட்டுணையும் மாற்றிக் கொள்ள எண்ணுதவர்களாய்த் தொடர்ந்து வாழ வேண்டும்.

அன்று மன்னர் தீமையோ, கொடுமையோ செய்தால் மறுத்துப் போராடிய மாண்பை நாம் இன்றும் மனத்துட் கொள்ள வேண்டும். கண்ணகிப் பெருமாட்டியையும், காரைக்கால்

அம்மையையும், பட்டினத்து அடிகளை யும், இயற்பகை ஏந்தலேயும் மனத்தில் கொண்டு, அறம் கடைப்பிடித்து, அச்சம் தவிர்த்து, முறைகேடு எதையும் எதிர்க்கும் திராணிபெற வேண்டும்.

இத்தகைய சிறப்புக்களை எல்லாம் நகரத்தார் சங்கங்களே நிலைநிறுத்தும்; வளர்க்கும். எனவே சங்கங்களைப் பேணிக் காத்தல் நம்மவர் தலையாய கடனாகும். முடிந்த அனைத்து ஆக்கமும் அளித்துச் சங்கத்தைப் புரத்தல் வேண்டும்.

இத்தகைய சங்கங்களில் பழமையான திருச்சி நகரத்தார் சங்கம் தன் வெள்ளி விழாவைக் கொண்டாடுவது அறிந்து பெரு மகிழ்வடைகிறேன். செவ்விய முறையில் செயலாற்றித் திகழும் ஒரு சங்கம் தன் வெள்ளி விழாவை வீறுடன் கொண்டாட முற்றிலும் உரிமையும் தகுதியும் உடையது.

இந்த, நெஞ்சு நிறைந்த மகிழ்ச்சிக்கு உரிய நன்னாளில் அன்பர்கள் பலருடன் கூடி

"திருச்சி நகரத்தார் சங்கம் சீரெலாம்
நிரம்பப் பெற்று, மேலும் மேலும் நல்ல
பணிகளை ஆற்றப் பல்லாண்டு
பல்லாண்டு
பல்லாயிரம் ஆண்டுகள் ஆண்டவன்
அருளால் செழித்து வாழ்க!"

என்று மனமார, வாய் மணக்க வாழ்த்தி மகிழ்கிறேன்.

மேலும் இச் சங்கத்தைக் கண்ணே போற் கருதிக் காத்துப் புரப்போர்க்கெல்லாம் அடியேன் கை கூப்பி அஞ்சலிக்கிறேன்.

வாழ்க சங்கம்! வளர்க பல்லாண்டு!





சங்க விழாவில்

திரு. கண்ணதாசன்



சங்க விழாவில்

திரு. தமிழ்வாணன்



முன்னுள்
தலைவர்களின்
படத் திறப்பு விழா



நமது சங்க விழாவில்
திருமதி. உமையாள் முத்து

# காவிரிக்கரையில் கன்னியருக்கு மணமாலை

அன்று திரைகடல் ஓடி திரவியம் திரட்டி ஈட்டிய செல்வத்தைக் கொட்டி தெய்வங்களுக்கு திருக்கோயில்களையும், ஏழைகள் வாழ அன்ன சத்திரங்கள் ஆயிரமாயிரம் கட்டி வாழ்ந்த நம் சமூகத்தார் இன்று திருமண முறை தலையால் தங்கள் தங்கள் பெண்களுக்கு திருமணம் செய்து காண இல்லாமல் இன்னல் உறும் பெற்றோர்கள் பலர்.

பூத்த பூ எப்போது காயாகும் என்று காத்திருந்து கண் கலங்கும் நம் இனப் பெண்கள் பலப்பல. பெற்றோர்களின் துயர் துடைக்க கன்னிப் பெண்களின் கனவுகள் நிறைவுபெற, நம் சங்கத்தின் தலைமை ஏற்ற நம் எல்லோராலும் அன்புடன் அழைக்கப்படும் "ஸ்டார்" அவர்கள் திருமணத் திட்டம் ஒன்று தீட்டி அயராத உழைப்புடன் இரு திருமணங்களை சங்கத்தின் ஆதரவில் நடத்தி வைத்தது பெருமைக்குரியதாகும்.

இத் திட்டத்தின்கீழ் பரிதாபி ஆண்டு ஆவணித் திங்கள் 29ம் நாள் கண்டனூர் தெ. ராம. லெ. பழநியப்ப செட்டியார் அவர்களின் திருவளர் செல்வி **தெய்வானையை** நம் இனத்து அன்புள்ளம் கொண்ட திருச்சி நகர் வாழ் நகரத்தார் உதவியுடன் அரிமளம் ராம. சாமிநாதன் செட்டியார் அவர்களின் திருவளர் செல்வன் **ராமநாதனுக்குத்** திருமணம், சங்கத்தின் ஆதரவில் திருச்சியில் ஒத்தமால் தெருவில் இருக்கும் நகரத்தார் சங்க நகர விடுதியில் இனிது நிறைவேறியது.

பரிதாபி ஆண்டு தைத் திங்கள் 23ம் நாள் பாகனேரி உல. சுப. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள் புதல்வி திருவளர் செல்வி **லெட்சுமியை** திருச்சிவாழ் நகரத்தார் உதவியுடன் ஓ. சிறுவயல் பழநியப்ப செட்டியார் அவர்கள் புதல்வன் திருவளர் செல்வன் **அழகப்பனுக்கு** திருச்சி நகரத்தார் சங்க ஆதரவில் நமது நகரவிடுதியில் திருமணம் இனிது நிறைவேறியது.

திருமணமும் நம் சமுதாய முறைப்படி மாப்பிள்ளை அழைத்து கோவில் மாலை கொண்டுவந்து, வேவு இறக்கி மணைபோட்டு, அரசாணிக்கால் கட்டி, முளைப்பாரி வைத்து, காப்புக்கட்டி, கால் மோதிரம் இட்டு குலம் வாழும் பிள்ளை எடுத்து பிள்ளை எடுக்கி, பெண் அழைத்து சகல சடங்குகளுடன் இனிது நிறைவேறியது என்பது குறிப்பிடத்தக்கது.

இத் திட்டத்தின்கீழ், நம் இனத்தவர்கள் திருச்சிக்கு வந்து நகர விடுதியில் திருமணம் செய்துகொள்ள இசைபவர்களுக்கு எல்லா உதவியுடன், சீரும் சிறப்புடனும் நம்மவர்களின் சடங்கு முறையுடன் இனிது செய்துவைக்கப்பெறுமென பெறு மகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.

# சங்கம் நடத்திய திருமணங்கள்






பாகனேரி லெக்ஷிமி
ஓ. சிறுவயல் அழகப்பன்
திருமணம்.

5—2—73

கண்டனூர் தெய்வானை
அரிமழம் இராமனுதன்
திருமணம்

14—9—72.





மணமக்களுடன்
சங்க நிர்வாகிகள்



நகரத்தார் சங்கம்
குரோம்பேட்டை
ஆரம்ப விழா.
நம் குழு உறுப்பினர்
**திரு. CT. சபாரத்னம்**
முயற்சியால் உருவானது.

# எனது மருத்துவம்

அ. சம்பந்தம் செட்டியார், அரிமழம்.

மருந்து என்று ஒரு அதிகாரம் வகுத்த திருவள்ளுவர் நோயற்ற வாழ்வுக்கு வழி காட்டுகிருர் அதில். பயின்று அதைப் பின்பற்றுபவரிடம் நோயணுகா. டாக்டர் பீசும் மருந்துச் செலவும் அவருக்கு இல்லையாகும்.

உயிர் வாழ்க்கைக்கு முக்கியமான காற்றும் வெளிச்சமும் குறைவாக உள்ள கட்டடங்களையுடைய நகர வாழ்வை மேற்கொண்ட இந்நாளில் பற்பல நோய்கள் நம்மிடம் நட்புக் கொள்கின்றன. அடிக்கடி நம்மைப் பற்றுகிற நோய் சளி (தடுமன்) என்பதாகும். இருமலும் காய்ச்சலும் அதன் தொடர்பாக நம்மைப் பற்றுகிற சளியின் உறவினர்களாவார்கள்.

நெஞ்சில் தேய்க்கவும் மூக்குவழி உருஞ்சவும் வாய்வழி விழுங்கவும் மாத்திரை மிக்சர்களும் நூற்றுக் கணக்காக விளம்பரமாவதைக் காணுகிருேம். நோய் கண்டவர் குறைந்த செலவில் விளம்பர மருந்துகளை வாங்கிக் குணம் காணுதபோது டாக்டரை யணுகி அவரின் பீசும் மருந்துக் கிறையமும் கொடுத்து விடுதலை பெற்றதாக ஒரு வகைத் திருப்தியடைகிருர்.

" கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே ஒட்டி உறைவார் உறவு " என்று ஒரு பழம் பாடல் சொல்லுவது போல நண்பனுக நம்மைப் பற்றிய சளியும் அடிக்கடி நம்மைத் தேடிவரவே செய்யும். வழக்கம்போல டாக்டர் பில் மருந்துச் செலவை நாம் மறுபடியும் ஏற்கவே செய்கிருேம். வந்த சிரமம் நீங்கும்போது திருப்தியும் அடைகிருேம். இவ்வகையாகத் துன்பமடைந்த ஒரு முதியவர் முத்திரையிட்டது போல ஒரு பழமொழி சொல்லிப் போனுர். " மூக்கு இருக்கும் வரை சளிப்போகாது !! " என்பதாக. நமதுபிழையை நாமே ஒப்புவது நாகரிகமாகாதல்லவா ? நமது பிழையை நாமே ஏற்றுக்கொள்ள நாமென்ன காந்தியடிகளின் வாரிசாகவா பிறந்துள்ளோம் ? நாகரிகப்பாங்கின்படி நமது தவறை மூக்கின்மேல் ஏற்றிச் சொன்னுர் அம் முதியவர். இது ஒருவகை உபசார வழக்கு.

நகரவாழ்க்கையில் சிக்கனம் தேட வேண்டிய கட்டாயம் பெரும்பாலோருக்கும் உண்டு. அந்த வகையில் ஒரு சிறந்த பரிகாரங் கண்டு எழுதி வைத்துள்ளார்கள் நமது முன்னேராகிய ஆசிரியர்கள். பயிற்சி எளிதானது. பயன் மிகமிக உயர்வானது. முயற்சித்து பழகிப் பாருங்கள். முயற்சி திருவினையாக்கும்.

பயிற்சி : ஒரு விரிப்பின்மேல் அமர்ந்து நிமிர்ந்திருந்து நேராகப் பார்க்கவும். மூச்சை மெதுவாக இழுக்கவும். உடனே வேகமாக விடவும். வெளிவிடுவது வேகமாக ஒரே முறையில் இருப்பது முக்கியம். நிதானமாக மூச்சை உள்ளிழுத்து ஒரே முறையில் ஓசை வரும்படியாக வெளிவிட வேண்டும். மூச்சை வெளியே தள்ளுவதில்தான் நமக்குப் பயனுள்ளது. கொல்லனது உலையில் ஓசையுடன்

காற்று வெளியாவது போல மூச்சை மிக வேகமாக வெளிவிடவேண்டும். தினசரி காலை அல்லது மாலை ஐந்து பத்துமுறை செய்யலாம். ஒரு வாரஞ் சென்ற பிறகு 15, 20 முறை செய்ய லாம். தொடர்ந்து செய்யவேண்டும்.

மூச்சை வேகமாகத் தள்ளிப் பயிலுவ தால் நாளடைவில் மூச்சுக் குழல் வலு வடைகிறது. வலுவடைந்த மூச்சுக் குழலிலிருந்து தடையற்ற வகையில் சீராக மூச்சு விடவும் இழுக்கவும் முடியும். அதன்தொடர்பாக ஆழ்ந்த மூச்சுப் பயிற்சியும் அமையும். ஆழ்ந்த மூச்சுப் பயிற்சி உடையவருக்கு சழிப் பிடிக்காது. சழியேயில்லை என்ருல் அதன் தோழர்களான இருமல் காய்ச்ச லும் வரச் செய்யாதுதானே. பிராணு யாம நூல்களில் கபாலபாதி என்று இப் பயிற்சியைச் சொல்வார்கள்.

தரையில் சம்மணம் போட்டு இருப் பது இக்காலம் பலருக்கும் இயலாத தாகும். அவர்கள் நாற்காலியில் இருந் தும் செய்யலாம். பாதங்கள் இரண்டும் தரையில் படிமானமாகவும் முழங்காலை உயர்த்தாமலும் முழங்காலிலிருந்து துடைவரை நாற்காலியில் படியும்படி யாகவும் உட்கார்ந்து நிமிர்ந்திருந்து இப்பயிற்சி செய்யலாம். முதுகு வளை யாது நிமிர்ந்து நேராகப் பார்த்துக் கொண்டு பயிற்சி செய்யலாம்.

உடல் நலம் பேண விரும்புகிறவர்கள் ஆசனப் பயிற்சியும் பிராணுயாமமும் தினசரி செய்வது பயனுடையதாகும். உடலும் மனமும் வலுவடையப் பயிற்சி உதவும். நல்ல பசி உண்டாகும். மலச்சிக்கல் இருக்காது. நல்ல தூக்கம் வரும். என்றும் சுறுசுறுப்பாக இருக் கலாம்.

பிராணுயாமப் பயிற்சி முறையாகச் செய்து வருவதால் ஆஸ்த்மா போன்ற நோயணுகாதிருக்கச் செய்யலாம். ஆஸ்த்மா உடையவர்கள்பிராணுயாமம் செய்வார்களானுல் அவர்கட்குச் சிரமம் குறையும். ஆஸ்த்மா தொடக்க நாளாக இருக்குமானுல் பயிற்சியினுல் அந் நோயில்லாமலே செய்யமுடியும்.

குளிக்கும்போது ஈரத்துணியால் உடலைத்தேய்த்துக் குளிப்பார்களானுல் ரத்தக் கொதிப்புச் சிரமம் குறையும். ஈரத்துணியால் உடலைத் தேய்த்துக் குளிப்பதால் தோலுக்கு ஒருவகைப் பிரகாசம் அமையும். பத்துப் படைகள் வராது. உடலைத் தேய்ப்பதால் மயிர்க் கால்கள் சுத்தமாகி கழிவுப் பொரு ளாகிய வியர்வை வெளிவர உதவும்.

உணவுக்குப் பிறகு பழங்கள் சாப் பிடுவது பயனுடையதாகும். பழங்களில் மல்கோவா மாம்பழம் மிகமிகச் சிறந்த குணங்களைத் தரும். வாயு உபத்திர வம் நீங்கும். மலச்சிக்கலை போக்கும். நல்ல ரத்த விருத்தியை உண்டாக்கும். இரவு உணவுக்குப் பிறகு தினசரி ஒரு பழம் சாப்பிட்டு வந்தால் பெண்களுக்கு சூதகவலி இல்லாமல் செய்யும். மல்கோவா மாம்பழம் தொடர்ந்து சாப்பிட்டு வருகிறவர்கட்கு அந்த ஆண்டு முழுதும் எந்த நோயும் அணு காது. என்றும் மல்கோவா கிடைக்கா தல்லவா? என்றும் கிடைக்கிற பப்பாளிப் பழத்திற்கும் வாயுச் சிரமம் மலச்சிக்கல் போக்கும் குணம் உண்டு. உணவுக் கட்டுப்பாடும் பயிற்சியும் உடையவர்களை எந்த நோயுமணுகாது. பயிற்சி செய்து பயனடைய வேண்டு கிறேன்.